Koviloor Digital Library

திருவள்ளுவர் ஆண்டு 2047 ஆடி - கார்த்திகை
சூலை - நவம்பர் 2017

ரூ. 8.00

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்



குருபூசை விழா : 7-9-2017
குருமுதல்வர் திருவுருவப்பட திருவீதி உலா - திருவண்ணாமலை

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

Koviloor Digital Library



திருவண்ணாமலையில் குருமுதல்வருக்கு சிறப்பு வழிபாடு




திருவண்ணாமலை குருபூசை விழா : அருளுரை




குருபூசை விழா ஊர்வலத்தில் ஐடிஐ மாணவர்கள்

Koviloor Digital Library





# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2048 மாதம் : ஆடி - கார்த்திகை
மலர் : 31 இதழ் : 7-11


# தியாகத்தின் வெளிச்சம்!

நாம் வாழும் தேசம் காந்தி தேசமா!

இல்லை! கனவு தேசமா!

காந்தி அடிகள் தமிழ்நாட்டைத் தன் தாய்வீடாகத்தான் நினைத்தார்!

தமிழ் மக்களைத் தம் உறவுகளாக நேசித்தார்!

தமிழ் மொழியைத் தம் உயிரிலும் மேலாக நேசித்தார்!

தென் ஆப்பிரிக்காவிற்கு இளம் வழக்கறிஞராக சென்றவர் அகிம்சைப் போராளியாக, சத்தியாக்கிரகியாக, இந்திய விடுதலைப் போராட்டத்திற்குத் தலைமை தாங்குகின்ற போராளியாக தென் ஆப்பிரிக்காவில் உருவாகின்றார்! இந்த மாற்றத்தை நிகழ்த்திய மந்திரவாதிகள் யார்! தமிழர்கள் தான்!

தென் ஆப்பிரிக்காவில் இந்தியத் திருமணச்சட்டம் செல்லாது என்று அறிவித்த பொழுது, காந்தியடிகள் தலைமையில் தமிழர்கள் வீதியில் இறங்கிப் போராடினார்கள். அதில் ஒரு வீரத்தமிழ் மங்கை! தில்லையாடி வள்ளியம்மை. 16வயது நிரம்பிய அறிவு மங்கை! போராட்டத்தில் சிறை புகுந்தார்! சிறையிலிருந்து அவரைக் குற்றுயிரும் குலைஉயிருமாக சமுக்காளத்தில் மடித்து காந்தியடிகளிடம் கொடுத்தார்கள்!

உயிர் போகும் தறுவாயில் இருந்த அந்த மங்கையின் காதருகே காந்தியடிகள் கேட்டார்! **வள்ளியம்மை நீ சிறை சென்றதற்காக வருந்துகிறாயா?** என்று கேட்டார்! வள்ளியம்மை தான் சிறைக்குச் சென்றதற்காக வருத்தப்படவில்லை என்று கூறினார்.

உயிர் போகும் தறுவாயில் இருந்த அந்த மங்கையின் கண்கள் பிரகாசமடைந்தன. **மீண்டும் ஒருமுறை சிறைக்குச் செல்கின்ற**

Koviloor Digital Library

வாய்ப்புக் கிடைத்தாலும் மகிழ்ச்சியோடு செல்வேன்! உயிரைவிடவும் சித்தமாயுள்ளேன் என்றார்! சில நாள்களில் மரணத்தைச் சந்தித்தார்! காந்தியடிகளின் கண்கள் குளமாகின! வள்ளியம்மை தியாகத்தால் தனக்குத் தானே ஒரு ஆலயத்தை அசைக்க முடியாத அன்பு ஆலயத்தைத் அமைத்துக் கொண்டார் என்று காந்தியடிகள் குறிப்பிடுகின்றார். தென் ஆப்பிரிக்க விடுதலைப் போராட்டத்தின் வெற்றிக்கு முழுக்காரணம் தமிழர்கள்தான்! இதனால்தான் தமிழர்களைப் பார்க்கின்ற போது எல்லாம் என் உறவுகளாக கருதுகின்றேன்! இதற்காகவே தமிழைக் கற்றுக் கொள்ள ஆசைப்பட்டேன். திருக்குறளைக் கற்றுக்கொள்ள ஆசைப்பட்டேன். என் பணிச்சுமை காரணமாக திருக்குறளைக் கற்றுக் கொள்ள முடியாமல் போய்விட்டது என்றார். உங்களுக்குப் பிடித்த இரண்டு வரி தமிழ்ச் செய்யுளைச் சொல்லுங்கள் என்று கேட்கின்ற பொழுதெல்லாம் கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக! - என்ற திருக்குறளைத்தான் காந்தியடிகள் குறிப்பிடுவார்!

1915ம் ஆண்டு காந்தியடிகள் தமிழகம் வந்தபொழுது பெருந்திரளான மாணவர்கள் குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் குதிரையை அவிழ்த்துவிட்டுத் தாங்களே இழுத்து வந்தார்கள்! அகிலம் போற்றும் அற்புதத் தலைவர் அரைநிர்வாணப் பக்கிரியாக உருமாறியதும் தமிழகத்தில் தான்! மதுரை மேலமாசி வீதியில் ராம்ஜி கல்யாணி சேட்ஜி என்ற குஜராத்தியர் வீட்டில் தங்கி இருந்த பொழுதுதான் ஆண்டிக்கோலத்திற்கு மாறினார். காந்தியடிகள் தம்மைச் சந்திப்பவர்களிடம் எல்லாம் கதர் அணியுங்கள் என்று வற்புறுத்துவார். அப்பொழுது ஒருவர் குறிப்பிட்டார்! நீங்கள் சொல்லி விட்டுப் போய் விடுவீர்கள். கதர் வாங்குகின்ற அளவிற்கு எங்களுக்கு சக்தி இல்லை! என்றார். காந்தியடிகளுக்கு இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. மறுநாள் மாலை மதுரையில் பொதுக்கூட்டத்தில் நான்கு முழ வேட்டி ஒன்றை மட்டும் அணிந்து கொண்டு மேற் சட்டை அணியாமல் வருகின்றார்! இந்தக் கோலத்தில்தான் தன் இறுதிக் காலம்வரை வாழ்ந்தார்! இலண்டன் வட்டமேசை மாநாட்டிற்கும் இந்த உடைக் கோலத்தில்தான் சென்றார். ஏன் இப்படி வருகின்றீர்கள்? என்று பத்திரிகையாளர்கள் கேட்டதற்கு என் உடையைப்பற்றிக் கவலைப் படாதீர்கள்! என் கருத்தை மட்டும் கவனியுங்கள் என்றார்!

Koviloor Digital Library

உலகத்திற்கு மாபெரும் தாக்கத்தை ஏற்படுத்திய அந்தத் தலைவனுக்குத் தாக்கத்தை ஏற்படுத்தியவர்கள் தமிழர்கள்! பாரதியும், ஜீவாவும் காந்தியடிகள் உள்ளம் கவர்ந்த மகத்தான தமிழர்கள்!

அவர் பளிங்கைப் போல் பரிசுத்தமானவர்!

சந்தேகத்திற்கு இடமில்லாத சத்தியவாதி!

அவர் ஒரு கருணை மறவர்!

அவருடைய பராமரிப்பில் நம்நாடு பத்திரமாக இருக்கும் என்பது உறுதி என்று மகாத்மா காந்தியடிகள் மனம் நெகிழ்ந்து நேருவைப் பற்றிக் குறிப்பிடுவார்! செல்வச் செழிப்பில் திளைத்த நேரு பெருமான் தேசத்திற்காக ஒன்பது ஆண்டுகள் சிறைப் பறவையாக வாழ்ந்தார்.

**வனப்பும், வளமும் மிகுந்த சோலைதான்: ஆனால், எனக்கான கடமை ஏராளமிருப்பதால், அதை ரசிக்க ஏது நேரம்? காலம் பல கடந்தபின்பே நான் கண்ணயரக் கூடும்** என்ற ராபர்ட் பிராஸ்டின் கவிதையைத் தன் மேசையின் மேல் எழுதி வைத்தவர். அவர் வாழ்க்கை முடிந்தது. அவர் எலும்புச் சாம்பல் கூட இந்திய ஏழை விவசாயிகளின் வயல்வெளியில் தூவப்பட்டது. திருவள்ளுவர் சொன்ன அந்த அன்பின் வழியது உயிர்நிலை என்று வாழ்ந்த ஆசியாவின் ஜோதி அணைந்துவிட்டது. அன்பின் உயிர்த் துடிப்பு அடங்கிவிட்டது.

ஏழைக் குழந்தைகளின் பிரகாசமான விழிகளின் ஒளியில் ஆசியாவின் சோதி சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றது.

ஏழைக் குழந்தைகளின் சிரிப்பொலியில் ஆனந்தபவனத்து அன்பு ஆன்மா வாழ்ந்து கொண்டிருக்கிறது.

மென்மையான மலர்களின் மணம்! கள்ளமற்ற ஒளிச் சிரிப்பு உடைய மழலை மலர்களை ஒளிமயமான தேசத்தை உருவாக்கும் இளைய தலைமுறைகளை மலரச் செய்வோம்!

ஒளிமயமான எதிர்காலத்தை உருவாக்க,

மழலை மலர்களின் அன்புத் திருநாளான குழந்தைகள் தினத்தைக் கொண்டாடுவோம்!.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

குன்றக்குடி அடிகளார்

Koviloor Digital Library

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## நல்லவர் பேச வேண்டும்! அல்லவர் ஏச வேண்டும்!

மாணிக்கவாசகர் பல்வேறு அனுபவங்களைச் சந்தித்தவர். மகிழ்ச்சிக்குரிய அனுபவங்கள் மாணிக்கவாசகர் வாழ்க்கையில் அருமையிலும் அருமை. அமைச்சுப் பொறுப்பிலிருந்த போதும் அந்தப் பொறுப்பை – பதவியைக் கடமையாகவும் பாரமாகவும் கருதினாரேயன்றி மகிழ்ச்சியாகக் கருதவில்லை.

ஆட்சிப் பொறுப்பு எளிதன்று; பொறுப்பு மிகுதியும் உடையது! மழை பெய்யவில்லையா? ஆட்சிக் காவலின் பிழையே என்பர் சான்றோர். பசி பட்டினியால் சாவா? இரந்து பிழைத்தலா? அனைத்துக்கும் காரணம் ஆட்சியே என்று கூறுவது மரபு. இளங்கோவடிகள் சேரன் செங்குட்டுவன் வாயிலாக ஆட்சி துன்பம் தரும் தகையது என்று கூறுவார்.

*"மன்பதைக் காக்கும் நன்குடிப் பிறத்தல்*
*துன்ப மல்லது தொழுதக வில்"*

என்பது சிலப்பதிகாரம்.

இன்று ஆட்சி சுகத்திற்குரியதாக விளங்குகிறது. இன்று அரசியல், ஆட்சி அனைத்தும் – ஈட்டத்திற்குரியனவாகும். சுகானுபவத்திற்குரியனவாகவும் விளங்குகின்றன. இன்று Power corruput என்பது பழமொழியாகவே விளங்குகிறது.

ஆட்சிக்குரியவர்கள் எப்படி விளங்க வேண்டும் என்பதற்குக் கம்பனில் ஓர் உதாரணம் கிடைக்கிறது. இராமன் வசிட்டனது இல்லத்திற்குச் சென்று படித்துவிட்டு வருகிறான். அன்று மாணவர்கள் ஆசிரியரைத் தேடிப்போன காலம்! இன்றோ ஆசிரியர்கள் மாணவர்களைத் தேடிப் போகிறார்கள்! இராமன் வசிட்ட முனிவர் இல்லத்திலிருந்து வருகிறான். சாலையில் இரு மருங்கிலும் மக்களைப் பார்த்த இராமன் இரதத்திலிருந்து இறங்கி அவர்களை நோக்கிப் போய்,

Koviloor Digital Library

*"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்*
*முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா*
*எதுவினை? இடர்இலை? இனிது நும் மனையும்*
*மதிதரு குமரரும் வலியர் கொல்?"*

என்று வினவியறிகிறான். ஆக, என்ன தெரிகிறது? இல்லங்கள் தோறும் நலமமைந்த வாழ்க்கை தேவை; இன்றியமையாத தேவை. அதற்கு அரசு உறுதுணையாக அமைதல் வேண்டும். உங்கள் பிள்ளைகள் வலிமையுடன் வாழ்கின்றார்களா? என்ன வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்? என்றெல்லாம் இராமன் கேட்கிறான். இன்றோ ஆட்சியாளர்களை அணுகமுடியாத நிலையில் வேலி! ஆட்சியாளர்களை அணுகமுடியாத நிலையில் குண்டு துளைக்காத கார்கள்! காவலர்களின் அணிவகுப்பு! ஆனால், அன்று நடந்தது முடியாட்சி; இன்று நடப்பது குடியாட்சி! மக்களுக்கும் ஆட்சியாளருக்குமிடையே இடைவெளி குறையும்போது நல்லாட்சி அமைய இயலும்.

உண்மையில் சமூகம் என்ற அமைப்பு உருவாகவில்லை. மனிதர்கள் கூட்டமாக வாழ்கின்றனர். கூட்டமாக வாழ்தல் வேறு. கூட்டமாக கூடுதல் கூடப் பயம், தேவை ஆகிய அடிப்படையிலேயே நிகழ்கிறது. ஒன்றாகக் கூடி வாழ்தல் வேண்டும். ஒன்றாகக்கூடி உழைத்தல் வேண்டும். இங்ஙனம் உணர்வால் ஒத்ததறிந்து வாழும் மக்கள் தொகுதியே சமூக அமைப்பு. உயர்ந்த சமூக அமைப்பில் தாழ்த்தப்பட்டோர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர், மேட்டுக்குடியினர் என்ற பாகுபாடு தோன்றாது; தோன்ற வழியில்லை. "ஒருவர் எல்லாருக்காகவும் எல்லோரும் ஒருவருக்காகவும்" என்று வாழ்வர். இயற்கை அமைவின் காரணமாகத் தகுதி, திறமையில் வேறுபாடுகள் இருந்தாலும் அல்லது காணப்பெற்றாலும் அவற்றை பொருட்படுத்துவதில்லை. பெரியோரை வியத்தல் தமிழ் மரபன்று. அதுமட்டுமல்ல. சிறியோரை இகழ்தல் அதனினும் இல்லை. தகுதி, திறமைகள் அழுக்காற்றைத் தூண்டி வளர்த்தல் உயர்ந்த சமுதாய அமைப்பில் காண இயலாது. "கடையனுக்கும் கடைத்தேற்றம்" எங்கு உள்ளதோ அங்கேதான் சமூகம் இருக்கிறது.

சமுதாயம் என்ற அமைப்பு, மனிதகுல வரலாற்றின் தொடக்க காலத்தில் இருந்தது. ஒருவரை ஒருவர் சார்ந்தே வாழ்ந்தனர். அன்று மனித குலத்தை அரித்து அழிக்கும் அழுக்காறு, அவா, வெகுளி ஆகிய தீமைகள் இல்லை. தனி உடைமைக் கோட்பாடும் வாழ்க்கை முறையும்







Koviloor Digital Library

தோன்றிய பிறகே சமுதாயம் உருக்குலைய ஆரம்பித்தது. பண்டங்களைப் பணமாக்கிப் புழங்கும் சமுதாயம் தோன்றிய பிறகே "மனிதம்" மறைந்தது. பண மதிப்பீட்டுக் கொள்கை கோலோச்சத் தொடங்கியது என்றோ, அன்றே சமூகம் என்ற அமைப்பு நொறுங்கி உருத்தெரியாமல் போய்விட்டது. களவும் காவலும் தோன்றின. இரப்போரும் ஈவோரும் தோன்றினர். ஆட்சிக்கு அதிகாரங்கள் பெருகி வளர்ந்தன. மக்கள் அடிமைகளானார்கள். அரசன் கடவுளானான். இது சமூகம் தோன்றி மறைந்த வரலாறு.

மாணிக்கவாசகர் காலத்தில் சமூக அமைப்பு கெட்டிருந்ததை அவரே குறிப்பிடுகிறார். இதனை,

*"சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்*
*ஆதமிலி நாயேனை"*

என்று பாடுவதால் அறியலாம். சாதி குலப்பிரிவினைகள் நிலப் பிரபுத்துவம் பெற்றெடுத்த குழந்தைகள்! வளர்த்தெடுத்த செவிலித் தாய். தனி உடைமைச் சமுதாயம். திருவாசகம் "அயலவர்" என்று குறிப்பிடுகிறது. ஆக, மாணிக்கவாசகர் காலத்திலேயே "நம்மவர்" "அயலவர்" என்ற வழக்குகள் தோன்றிவிட்டன. "பொய்யர்தம் மெய்" என்பார் மாணிக்கவாசகர். கடவுள் நம்பிக்கையை வலியுறுத்திய மதப் புரோகிதர், ஆதிக்க சமுதாயத்தின் பால் சேர்த்துவிட்டனர்; சுரண்டும் கூட்டத்தில் சேர்ந்து கொண்டு "செல்வச் செழிப்பு, கடவுள், கருணை, புண்ணியத்தின் பயன்" என்று கூறியவுடன் சுரண்டப்பட்ட - வாழ்விழந்த மக்களிடம் கடவுள் மறுப்புக் கொள்கை தோன்றலாயிற்று. அவர்கள் ஆப்தமான உறவினராக இருந்து "அயலார்" ஆயினர். நாத்திகம் பேசினர். மனிதகுல நாகரிகத்திற்கு - பாதுகாப்பிற்குக் கடவுள் நம்பிக்கை தேவை. நாத்திகம் நஞ்சு. அதே போழ்து கடவுள் நம்பிக்கை மனித நேயத்திற்கு மாறாக இருப்பின் அது நாத்திகத்தினும் கொடிது.

மாணிக்கவாசகர் காலத்தில் சமூகம் உருக்கொள்ளவில்லை. மாணிக்கவாசகர் காலத்தில் சமூகம் சீர்குலைந்து இருந்தது. அவரவர் மனப்போக்குப்படி பேசினர்; அவரவர் விரும்பியவாறு ஒழுகினர்.

*"ஊரவர் தத்தம் மனத்தன*
*பேச எஞ்ஞான்று கொல் சாவதுவே!"*

என்று மாணிக்கவாசகர் புலம்புகிறார்.

Koviloor Digital Library

சமூகம் - சமுதாயம் என்ற அமைப்புத் தோன்றியது. ஒருவரையொருவர் தாங்குவதற்காக, வாழ்விப்பதற்காகவேயாம்.

இந்த உலக அமைவு - இயற்கை நோக்கின் ஒப்புரவு நெறி பேணத்தக்கதாகவே அமைந்துள்ளது. ஒன்றின்றி ஒன்றில்லை என்பதை நியதியாக விளக்குகிறது. ஆனால் மனிதன் உயிரியல் இயற்கையை - மனித இயல்பைப் பெரிதும் முயன்று அழிக்கிறான். அதன் விளைவே கெட்ட போரிடும் உலகத்தின் தோற்றம்! ஏன் இந்த உலகத்தில் பஞ்சம்? பாரதி காரணம் சொல்கின்றான்.

*"நேராக மானுடர் தாம் பிறரைக் கொல்ல*
*நினையாமல் வாழ்ந்திட்டால் உழுதல் வேண்டா,*
*காரான நிலத்தைப் போய்த் திருத்த வேண்டா;*
*கால்வாய்கள் பாய்ச்சுவதில் கலகம் வேண்டா;*
*சீரான மழை பெய்யும் தெய்வமுண்டு;*
*சிவன் செத்தா லன்றி, மண்மேல் செழுமை உண்டு"*

(பாரதி அறுபத்தாறு - 61)

என்று பாடினான். இன்று என்ன நிலை? மண்மேல் செழுமையைக் காணோம். "சிவன் செத்து" விட்டானா? நஞ்சுண்டும் சாகாத சிவன் எப்படிச் சாகமுடியும்? சாவாதவன் மூவாதவன் சிவன். சிவன், மனிதகுலம் நெறிமுறை தவறித் தறிகெட்டுப் போவதைக் கண்டு திகைத்துச் சிலையாக நிற்கிறான்! அவ்வளவுதான்.

இன்றோ சமூகம் இடறி விழுகிறது; ஒருவன் முன்னேறுவதற்கு இடையூறுகள் செய்கிறது. இடறி விழுந்து விட்டால் எடுத்துத் தூக்க மறுக்கிறது. உண்மையில் சமூகம் நம்மீது சவாரி செய்கிறது. ஏசுகிறது; பேசுகிறது; இழிவு செய்கிறது. மானம், மரியாதை என்ற பெயரில் கலகம் செய்கிறது. அழுக்காற்றின் வழிப்பட்டு அல்லற்படுகிறது; அல்லற்படுத்துகிறது. ஆதலால், சமூகம் என்ற அமைப்பு வலிமையான அமைப்பாக உருக்கொள்ளவில்லை.

மனிதன் ஒரு சமூகப் பிராணி. ஆனாலும் அவனால் சமூகத்தில் ஓர் உறுப்பினனாக வாழ முடியவில்லை; வாழ இயலவில்லை. ஆதலால், சமூகத்தின் அங்கீகாரத்தை மனிதன் பெற முயற்சி செய்வதில் அர்த்தமில்லை; பொருளும் இல்லை. சமூகம் "நல்லது", "உண்மை" என்ற அடிப்படையில் மதிப்பீடு செய்யாது. தகுதி, திறமைகளுக்கும் கூட சமூகம் மதிப்புக் கொடுப்பதில்லை. ஆதலால், நாம் வளர வேண்டுமானால் இரண்டு நிகழ்வுகள் கட்டாயமாக நிகழ்ந்தாக வேண்டும். அதாவது,





Koviloor Digital Library

"*பேசப்பட்டேன் நின்னடியாரில் பூதலரால்*
*நின் அடியான் என்று ஏசப்பட்டேன்*"

என்ற மாணிக்கவாசகரின் அனுபவம் நமக்கும் பொருந்தும்; வேண்டும்.

நல்லவர்கள் கூடியிருக்கிற அவையில் நாம் ஒரு பொருளாக மதிக்கப்பெற்றுப் பேசப்படுதல் வேண்டும். கெட்டவர்கள் கூடியுள்ள கூட்டத்தில் நாம் ஏசப்படுதல் வேண்டும். இவை இரண்டும் நிகழ்ந்தால் நாம் நல்லவர்களாக வாழ்கிறோம் என்பது பொருள்.

மாணிக்கவாசகருக்குத் தம்மை இந்த உலகம் "பேய்" என்று கூறிப் பரிகாசத்துடன் சிரிக்க வேண்டுமாம். ஆம்! இன்று இந்த உலகம் பேயாகத்தான் திரிகிறது! பணப்பேய் பிடித்தாட்டுகிறது. தலைவராதல் வேண்டும் என்ற பேய்க் குணம் பிடித்தாட்டுகிறது. நல்லதைக் கேட்பதும் இல்லை; சிந்திப்பதும் இல்லை. ஆதலால், இந்த உலகம் என்னை அங்கீகரிப்பது என்பது ஒருபோதும் ஆகாது. அப்படியே அங்கீகரித்தாலும் பயன் ஒன்றும் இல்லை. பயன் இல்லாதது மட்டும் அல்ல – தீமையும் விளையும்.

திருக்குறள் "புகழ்" என்று ஓர் அதிகாரம் ஓதுகிறது. புகழெனின் உயிரும் கொடுப்பர்; பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்? என்பது புறநானூறு.

புகழ் என்பது என்ன? இன்று நாம் கேட்பது, காண்பது புகழல்ல! இன்று விளம்பரத்தைப் புகழ் என்று கருதுகிறார்கள். விளம்பரம் வேறு. புகழ் வேறு. சமுதாயத்தில் பயன்பட வாழ்ந்தோர் இருப்பை – தேவையைச் சமூகம் உணர்வதே புகழ். புகழ், வேண்டிப் பெறுவதல்ல. தாமே வரலாற்றுப் போக்கில் வந்தடைவது புகழ்.

இங்ஙனம் பலபட வாழ்க்கைக்குப் புகழ் தேவை என்று கூறினும் புகழை விரும்பாத சான்றோர்களும் இருந்துள்ளனர்; இருக்கின்றனர். அவர்கள் தம் புகழ் கேட்கின் நாணுவர். ஏன்? மாணிக்கவாசகரும்,

"*வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்*
*வேண்டேன் மண்ணும் விண்ணும்*"

என்றார். ஈசனின் புகழே பொருளுடைய புகழ் என்றார்.

புகழ் கேட்டு மகிழ்தல், பழி கேட்டு மனம் கோணுதல் மனிதர் இயல்பன்று. புகழப்படும்போது மகிழ்ந்து கேட்கலாம், பழியை மட்டும் கேட்கக் கூடாதா? மற்றவர் பழித்தலை மனம் கோணாது கேட்கவேண்டும். "யாம் வல்லேம்" என்று மமதை கொள்ளுதல் தகாது. மமதை

Koviloor Digital Library

இழக்கப்படுதல் வேண்டும். "நான்" கெட்டுப் போகவேண்டும். தாழ்வெனும் தன்மை வேண்டும். அறிவுடையோம் என்னும் செருக்கும் மயக்கமும் ஆகாது. செருக்கு, அறிவு வளர்ச்சியின் ஊற்றுக்களைத் தூர்க்கும்; மூடனாக்கும்; முட்டாளாக்கும்; பேதையாக்கும்; மூர்க்கனாக்கும். எவ்வகையாலும் செருக்கு ஆகாது; கூடாது.

இத்தகு தீய வாயில்களை அடைத்து நன்னெறி வாயிலைச் சார்தல் வேண்டும். "கடவுள் ஒன்று" என்ற துணிவு வேண்டும். "இவர் தேவர், அவர் தேவர்" என்று ஆசைகளால் உந்தப்பட்டு அலை மோதல் கூடாது. ஈசனை – இறைவனை நினைந்து நினைந்து கன்று ஈன்ற ஆவின் மனம் போலக் கசிந்துருகி அழக் கற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதுவே ஆன்மீக வாழ்க்கை; சமய வாழ்க்கை.

நெறிமுறை பிறழ்ந்த சமூகத்தின் மதிப்பீட்டை எதிர்பார்க்கக்கூடாது; புகழை விரும்பி அலையக்கூடாது. பழிச்சொற்களை விரும்பி ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். கடவுள் உண்டென்றும் ஒன்றென்றும் துணிதல் வேண்டும். அக்கடவுளை ஆவின் மனம் போல நினைந்து நினைந்து கசிந்துருகி வழிபடல் வேண்டும்.

*"சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப*
*நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை*
*பூணது வாகக் கோணுத லின்றிச்*
*சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்*
*கதியது பரம அதிசய மாகக்*
*கற்றா மனமெனக் கதறியும் பதறியும்*
*மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது"*

(போற்றித் திருவகவல் 68-74)

– என்பது ஓர்க.

---

(தொடரும்)

ஏழைகளை உயர்த்த கல்வி ஒன்றால்தான் முடியும் என்று சுவாமி விவேகானந்தர் தெரிவித்தார். திருவள்ளுவரும் கற்பது ஒன்றுதான் உயர்வுக்கு வழி, கற்பது மட்டுமல்ல, கற்றதன்படி அதன் வழி நிற்பதாலும்தான் என்கிறார். கல்வி அறிவை மேன்மையாக்கும். அறிவு மனிதத்தை மேன்மையாக்கும். அன்பும், அறிவும் இணைந்தால் உலகம் மேன்மையாகும்.

– தவத்திரு பொன்னம்பல அடிகளார்

(2.11.2017, கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் சிலை திறப்பு விழா பேச்சு...)

Koviloor Digital Library

# முத்தமிழறிஞர் டாக்டர்.கலைஞர் பல்லாண்டு வாழ்க!

(தவத்திரு பொன்னம்பல அடிகளார்)



1924இல் திருக்குவளையில் புறப்பட்ட தீப ஒளி! ஏழை, எளிய அடித்தளத்து மக்களின் வாழ்வில் இருளை அகற்றும் ஒளி விளக்காய், காரிருளில் தவித்துக் கிடக்கும் மக்களின் வாழ்க்கையில் ஒளி வீசும் காலைக் கதிரவனாய், கொந்தளிக்கும் கடலின் சூறாவளியில் தடுமாறும் மக்களைக் கரை சேர்க்கும் கலங்கரை விளக்காய், ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கக்கூட அச்சப்பட்ட அடித்தளத்து மக்களின் வாழ்க்கையை வெளிச்சமாக்க கிழக்கு வானில் தோன்றிய விடிவெள்ளி கலைஞர்!

கலைஞர் எனும் பெயர்ச்சொல் கோடிக்கணக்கான மக்களின் வாழ்வின் உயிர்ச்சொல்லாய் உருமாறி, ஏமாற்றங்களில் உழன்று கொண்டிருந்த மக்களின் வாழ்வில் மாற்றங்களை நிகழ்த்திக் கொண்டிருக்கிறது.

விழியில் ஒளியிழந்த மக்களின் வாழ்வில் கண்ணொளி வழங்கும் திட்டம் தொடங்கிய கருணையின் ஒளி கலைஞர்!

மனிதரை மனிதர் இழுப்பது அநீதி என கை ரிக்ஷாவினை ஒழித்த கடமையின் சீலர் முத்தமிழறிஞர் கலைஞர்!

உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு வான்புகழ் வள்ளுவர் கோட்டம் கண்டவர் கலைஞர்!

தீந்தமிழ்த் திருக்குறளுக்குச் சொல் ஓவியமாய் குறள் ஓவியம் தீட்டியவர் கலைஞர்!

கன்னியாகுமரி கடற்கரையில் 133 அடி உயரத்தில் விண்முட்டும் உலகின் எட்டாவது அதிசயமாய்த் திருவள்ளுவர் சிலை அமைத்தவர் கலைஞர்!

காலம் காலமாய் காயப்பட்டு, சேதப்பட்டு, ஒதுக்கப்பட்டு இருந்த தமிழ் மொழியை செம்மொழிச் சிம்மாசனத்தில் அமர வைத்தவர் முத்தமிழறிஞர் கலைஞர்!

Koviloor Digital Library

சாதிகளால் பிரிந்து கிடந்த தமிழகத்தைச் சமத்துவபுரமாக்கிய மனிதநேயர் முத்தமிழறிஞர் கலைஞர்!

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் மண்ணுக்கு அடியில் புதைந்து கிடக்கும் கரி, வைரமாய் ஒளி வீசுவதைப் போல், காலம் காலமாய் அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட சாமானியர்களில் இருந்து அடக்குமுறை, ஒடுக்குமுறை இவற்றை எல்லாம் எதிர்கொண்டு புதிய சரித்திரம் படைத்த ஜனநாயக மணிமகுடத்தின் "தனி வைரம்" முத்தமிழறிஞர் கலைஞர்!

கலைஞரைப் போற்றுகின்றோம்! எதற்காக? ஏமாற்றங்களில் உழன்று கொண்டிருக்கும் மக்களின் வாழ்க்கையில் மாற்றங்களை நிகழ்த்திய அவரின் எழுத்து நெசவுக்கா?

மகுடிக்குக் கட்டுண்ட பாம்பைப்போல் மக்களை மயக்கும் அவரின் மந்திரப் பேச்சுக்கா? இமைப்பொழுதும் சோர்விலாது கண்ணுக்குத் தெரியாத கடைகோடி மனிதனின் வாழ்க்கையின் ஏற்றத்திற்கு உழைத்துக் கொண்டிருக்கும் உழைப்பிற்காக கலைஞரைப் பாராட்டுகின்றோம்.

இவற்றிற்கெல்லாம் அப்பால் கருணையினாலன்றி வேறு எதற்கும் ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்தாத அவரின் ஆட்சி செங்கோலுக்கும், அடக்குமுறை, ஒடுக்குமுறைக்கு அஞ்சாது மனிதத்தை என்றும் உயர்த்திப் பிடிக்க வளையாத அவரின் எழுதுகோலுக்கும் மனிதகுலம் என்றென்றும் நன்றிக்கடன் பட்டிருக்கின்றது. நிறைவாகச் சிந்தித்தால்,

அரியாசனங்கள் அறியாச் சனங்களால் வரலாம்! போகலாம்!

ஆனால் கலைஞர் என்றென்றும் ஏந்திப் பிடித்திருக்கும் கொள்கைச் சாசனத்தை காலம் எப்போதும் மறுதலிக்காது.

பல நூற்றாண்டுச் சாதனைகளை சரித்திரமாகப் படைத்து, 94 வயதினைத் தொட்டிருக்கும் முத்தமிழறிஞர் கலைஞர் புகழ் பல்லாண்டு வாழ்க!

---

*நாம் அமிழ்தத்தை எங்கும் தேடவேண்டாம். அமிழ்தம் எங்கோ ஆகாயத்தில் ஒளித்து வைக்கப்படவில்லை. ஆகாயத்திலிருந்து மண்ணை நோக்கிப் பொழியும் மழைதான் அமிழ்தம் என்று திருவள்ளுவர் கூறுகிறார். அமிழ்தம் என்பது தனி ஒருவரை வாழவைப்பதல்ல. உலக உயிர்க்குலத்தை வாழ வைப்பதாகும்.*

**- தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

Koviloor Digital Library

# சிலம்பில் தொல்காப்பியப் பதிவு – VI

(தமிழாகரர். தெ. முருகசாமி)

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில் பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பிய விதிகளைக் கதைப்பகுதிகளோடு செயல்முறையாகச் சார்த்திப் பார்க்கும் தொடர்ச்சியில் (APPLIEDTHEORY) கோவலனால் கண்ணகிக்கு ஏற்பட்ட இருவேறு மெலிவை இக்கட்டுரையில் காணலாம்.

கோவலன் மாதவியை நாடிச் சென்றதும் தன் மனைவி கண்ணகியை மறந்தான். கணவனது பிரிவால் கண்ணகி உடலாலும் உள்ளத்தாலும் மெலிந்தாள்.

இம்மெலிவு மேலும் மெலிவடையுமாறு, பிரிந்தவன் மனைவியை நாடி மாதவியை வெறுத்து வந்தபோது கண்ணகியின் செயல்பாட்டால் அவளின் கூடுதல் மெலிவு வெளிப்படுகிறது.

இலக்கணத்தில் மெய் எழுத்திற்கு அரை மாத்திரை அளபு. அந்த அரை மாத்திரை அளபு, ஒரு மொழி அளவிலும் இரு மொழி அளவிலும் குறைந்து ஒலிக்கும் எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

மெய்யின் அளபே அரையென மொழிப - எனத் தொல்காப்பிய எழுத்ததிகார நூல் மரபு நூற்பா (11) கூறுகிறது. இங்ஙனம் கூறியதில் மகர மெய் எழுத்திற்கு மட்டும் தனி இலக்கணமாகச் சில நூற்பாக்களை வரையறுக்கிறார் தொல்காப்பியர்.

*அரையளபு குறுகல் மகரம் உடைத்தே*
*இசையிடன் அருகும் தெரியும் காலை*

என்ற நூல்மரபு நூற்பா (13) "மகர மெய் தனக்குரிய அரை மாத்திரையினின்றும் குறைந்து கால் மாத்திரையாய் ஒலிக்கும், இப்படி ஒலித்தல் - செய்யுளுள் ஓசை கருதி அரிதாகத் தோன்றும்" - என்கிறது.

இதற்கான எடுத்துக்காட்டு "போன்ம்" - என்பதாகும். போலும் என்ற கருத்தை உணர்த்தும் சொல்தான் - போன்ம் - என்பதாகும்.

போலும், போன்ம் என்ற ஈரிடத்தும் உள்ள மகர ஒலியளபு வேறுபட்டதாகும். போலும் என்பதில் மகரம் முழுமையாக

Koviloor Digital Library

உச்சரிக்கப்படுகிறது. அதாவது மகரத்தின் இயல்பான அரை மாத்திரை முழுமையாக ஒலிக்கப்படுகிறது.

ஆனால் போன்ம் என்பதில் இரண்டு மெல்லினம் சேர்ந்த நிலையில் மகர ஒலி தன் இயல்பான அரை மாத்திரையில் குறைந்து கால் மாத்திரையாகவே ஒலிக்கிறது. இக்கருத்தை மேலும் உறுதிப்படுத்துவது போல, எழுத்ததிகார மொழிமரபில்

*செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்*
*னகார மகாரம் ஈரொற் றாகும்* (18)

என்ற நூற்பாவாலும் ஒரு சொல்லில் அமையும் மகரக் குறுக்கம்பற்றிக் கூறப்பட்டன.

இப்படி ஒரே சொல்லில் மகர மெய் குறுகி ஒலிக்கும் இலக்கண உணர்வைச் சிலம்புடன் பொருத்தினால் கோவலனது பிரிவால் கண்ணகி உள்ளத்தாலும் தனிமையாலும் மெலிந்த வாழ்வின் நிலையை உணரலாம்.

இந்த ஒரு சொல் அளவில் மகரம் குறுகி ஒலிப்பதைக் கூறும்போது னகர மகரங்கள் ஆகிய எழுத்துக்கள் சேர்ந்ததையே தொல்காப்பியர் கூறினார். அதன் அடிப்படையில் செய்யுள் இறுதிப் போலி மொழிவயின் - என்ற நூற்பாவில் (மொழி மரபு 18) போலி என்பது போல என்ற பொருள்தரும் உவமைச் சொல்லான போன்ம் என்பதைக் குறிப்பதாகவே. னகார மகாரம் ஈரொற்றாகும் என்றும் னகாரை முன்னர் மகாரம் குறுகும் என்றும் தொல்காப்பியர் கூறினார்.

இருப்பினும் போல என்ற கருத்தை உணர்த்தும் சொல்லைப் போல இருமெய் எழுத்துக்கள் சேர்ந்த மகரக் குறுக்கத்திற்கு உரையாளர்கள் - மருண்ம் என்ற சொல்லை உதாரணமாகக் காட்டினர். மயக்கம் என்ற பொருளைத் தருவது மருளும் என்பதாகும். அச்சொல் மருண்ம் என வரலாம் என்பது காலத்தால் கண்டறியப்பட்ட சொல்லாகும்.

இந்தப் புதுச் சொல்லாக்கம் என்பது தொல்காப்பியத்தின்படிக் கடிசொல் இல்லைக் காலத்துப் படினே (சொல்.எச்ச.56) என்ற நூற்பாவின்படி உணரப்படுவதாகும். இந்த நூற்பாவின்படியே இளங்கோவடிகள் மேற்படி மருண்ம் என உரையாசிரியர் கண்டறிந்து

Koviloor Digital Library

சொன்னது போலக் கண்ணகி வாயிலாகக் "கொண்ம்" என்ற சொல்லாக்கத்தைத் தந்துள்ளார்.

அதாவது தொல்காப்பியர் னகரமகர இணைப்புக்கே நூற்பா கூறினாலும் அவைபோல வரும் ணகர மகர இணைப்புச் சொல்லையும் எடுத்துக் கொள்ளலாம் என உரையாசிரியர்கள் மருண்ம் எனக் காட்டினர். உரையாசிரியர்களுக்கு முன்னரே இளங்கோவடிகள் கண்ணகி மூலம் "கொண்ம்" – எனச் சுட்டிக் காட்டியது தொல்காப்பியப் பதிவு எனலாம்.

"கொள்க அல்லது கொள்ளும்" என்ற கருத்தைச் சுட்டுவதே கொண்ம் என்பதாகும்.

மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியிடம் வந்த கோவலன் தன் தவறுகளைச் சுட்டிக் கூறினான். மாதவிக்குப் பொருள்தர வேண்டும் என்பதற்காக வந்துள்ளான் எனத் திரிபாகக் கருதியதால் கண்ணகி எஞ்சியிருந்த சிலம்புகளைத் தரும்போது சிலம்புள "கொண்ம்" – என்றாள்.

ஈண்டு னகரத்துடன் நிற்கும் மகரம் குறுகி ஒலித்தல் போல ணகரத்துடன் நிற்கும் போதும் மகரம் குறுகுவதை இளங்கோ உணர்த்தினார்.

இதனால் கணவனைத் திருத்தமுடியாத தவிப்பில் தம் உள்ளக் குமுறலைத் தானே தன் மனத்திற்குள் குழிதோண்டிப் புதைத்துக் கொள்வாள் போல மனம்விட்டு ஏதும் கூறமுடியாத நிலையில் கொண்ம் என்றாள். இது ஒரே சொல்லால் உணரப்படும் மகரக் குறுக்கமாகும்.

அடுத்து இரு சொல்லால் அதாவது நிலைமொழி வருமொழி என்ற அளவில் மகரம் குறுகுவது பற்றித் தொல்காப்பியர் கூறுகையில்,

"வகார மிசையும் மகாரம் குறுகும்" – (புள்ளி மயங் 35) என்ற நூற்பாவால் விளக்கியுள்ளார். வகர எழுத்தை முதலாகக் கொண்ட சொல் வருமொழியாக வரும் போது நிலைமொழியில் மகரம் இறுதியில் நின்றால் அதன் இயல்பான அரை மாத்திரையின்னும் குறுகிக்கால் மாத்திரையாய் உச்சரிக்கும், இது இருமொழியிடத்து அமையும் மகரக் குறுக்கமாகும்.

நிலம் வலிது, வரும் வளவன் என்ற சொற்களில் "ம்" அரை மாத்திரையாக ஒலிக்காமல் கால் மாத்திரையாக ஒலிக்கிறது. இதற்குக் காரணம் வகரம் வருமொழியே ஆகும்.

Koviloor Digital Library

நிலம் சிறிது, நிலம் மெலிது எனும்போது மகரத்தின் முன்வரும் வல்லினமெல்லின எழுத்துக்கள் முழுமையாக உச்சரிக்கப்படுதல் போல் நிலம் வலிது எனும் இடையின எழுத்து வரும்போது முழுமையாக உச்சரிக்கப்படாத ஒலிக்குறையால் மகரமும் குறுகி ஒலிக்கும்.

வாயை அங்காந்த நிலையிலோ (திறந்த நிலையில்) இதழ்கள் ஒட்டிய நிலையிலோ உச்சரிக்கப்படும் எழுத்துக்கள் முழுமையாக ஒலிக்கும். அவ்வாறே இடையின எழுத்துக்களுள் ய, ர, ல, ழ, ள என்ற ஐந்தும் முழுமையாக ஒலிக்கும். ஆனால் வகரம் மட்டும் கீழ் உதடோடு மேற்பல் தொட, வகரம் உச்சரிக்கப்படும்போது முழுமையன்றியே ஒலிப்பதால்தான் தொல்காப்பியர் வகாரமிசையும் மகாரம் குறுகும் என்றார். இதனால் வகரத்தின் குறை ஒலிப்பு தெரிகிறது.

இங்ஙனம் கூறிய இலக்கண உணர்வைச் சிலம்புடன் பொருத்தும் போது இளங்கோவின் நுண்மாண் நுழைபுல இலக்கண மாண்பு உணரப்படுகிறது எனலாம்.

கோவலன், தாலி கட்டிய மனைவியை மறந்து மாதவியுடன் வாழ்ந்த போதே அவன் முழு மனிதத் தன்மையின்றும் குறைந்துவிட்டான். மாதவியோடும் முழுமையாக வாழமுடியாமல் வந்துவிட்டதால் அரை மனிதத் தன்மையிலிருந்தும் கால் மனிதத் தன்மையாகிவிட்டான்.

வகரமானது முழுமையாக வாயைத் திறந்து உச்சரிக்கப்படாமலும் இரு உதடு ஒட்டி உச்சரிக்கப்படாமலும் பல்லும் இதழும் ஒட்டியும் ஒட்டாமலும் உச்சரிக்கும் இடைப்பட்ட ஒலியைப் போலக் கோவலன், கண்ணகியோடு வாழாமலும் மாதவியோடு வாழாமலும் வாட்டமுற்றதோடு, பிறந்த நாடான சோழநாட்டிலும் வாழ முடியாமல் புகுந்த நாடாகிய மதுரையிலும் வாழ முடியாமல் இறந்துபட்ட உணர்வை வகரத்தின் முன் வரும் மகரம் அரை மாத்திரையில் நிலைக்காமல் கால் மாத்திரையாய் தடுமாறி நிலைப்பது போல் நிலைப்பதைப் பொருத்திப் பார்க்குமாறு உள்ளது.

இந்த இருமொழி சேர்க்கையாலான மகரக்குறுக்கத்தில் வருமொழியைக் கோவலனாகவும் நிலைமொழியைக் கண்ணகியாகவும் ஒப்பிடலாம்.

நிலைப்பது நிலைமொழி என்றாற்போல இல்லறநெறியில் மாறாமல் இருந்தவள் கண்ணகி என்பது புலப்படும். ஆனாலும் அவளை நிலைகுலையச் செய்தவன் மாதவியைப் பிரிந்துவந்த கோவலன்





Koviloor Digital Library

என்பதால் அவன் வகர வருமொழி போன்றவனானான். வகரம் என்பது வகர எழுத்தைக் குறித்தாலும் கோவலனது வக்கிரமமான அல்லது வன்கண்மையான வாழ்க்கை முறையே கண்ணகியை நிலைகுலையச் செய்துவிட்டது என்பதால் அதைப் பொருத்தமான சொல்லாட்சி எனலாம்.

ஒருமொழி மகரக் குறுக்கத்தில் பெரும்பாலும் கண்ணகியின் துன்பம் மேலோங்கியும் கோவலனின் துன்பம் கீழோங்கிய நிலையில் இலை மறையாகவும் உணர்த்தப்பட்டது.

ஆனால் இருசொல் புணர்த்தும் நிலையில் மகரக் குறுக்கம்; வருமொழியால் வருவதென்பதை வெளிப்படையாகக் காட்டுவதால் கோவலனின் துன்பம் மேலோங்கிக் காட்டப்பட்ட நிலையில் கண்ணகியின் துன்பம் அதன் நிழலாகக் கீழோங்கியவாறாகக் காட்டப்பட்டது என உணரலாம். இவ்வாறாக எழுத்துக்கள் சுமந்துள்ள இயல்பான இலக்கண உணர்வுகள் - சிலம்பின் கதாபாத்திர வாழ்வியலோடு இயல்பாகப் பொருந்துவதாய் உள்ளதால் அங்கத்திற்கேற்ற அங்கிபோலப் பொருத்தமாய் உள்ள இலக்கியத்தை இலக்கணத்தால் உணரும்போதுள்ள உவகையே தனியானது (ஏகாந்தமானது) எனலாம் அன்றோ!

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்

Koviloor Digital Library

# முக்தியடைந்தார் மூக்கப் பிள்ளை

(தமிழாகரர். தெ. முருகசாமி)

திருச்சி வரகனேரி வாழ்ந்தமூக்கப் பிள்ளை
பெருஞ்சிறப்பு கொண்ட பெரியார்! – தரும் வாழ்வு
தக்க திருமுறை இன்னிசைப் பண்ணிற்கு
மிக்கதுணை யாயிருந்த தே!

முழுநீற்று நெற்றியர்!
மூத்த வடிவின்
பழுதிலா அப்பர்தோற்
றத்தர்! – விழுதாய்த்
திருச்சிமலைக் கோட்டையில்
தீந்தமிழ்த் தெய்வத்
திருமுறைக்குச் செய்தாரே
தொண்டு!

வவாண்மம் செய்வார்க்கு வாணிபம் என்றபடி
வாஞ்சையுடன் வாணிபம் செய்தேதன் – வாழ்நாளில்
சேர்த்த பொருளெல்லாம் மெய்ப்பொருள் நாயனார்போல்
ஆர்த்தளித்தார் அவ்வப்போ தே!

குன்றக் குடியுடன்
கொண்டநல் தோழமை
என்றும் மறக்கத்தான்
பாலதோ? – நின்று
நிலைக்கஅறக் கட்டளைகள்
நீவே செய்து
நிலைத்தாரே! முத்திக்கு
வித்து!

தொண்டலால் தூய துணையிலை என்றிட்ட
பண்டுபுகழ் அப்பர் பணிபோலத் – தொண்டு
பலசெய்த மூக்கநற் பிள்ளை யவர்கள்
நிலப்புகழ் பெற்றார் நிலைத்து!

Koviloor Digital Library

# ஆம்! இப்படியும் ஒருமனிதர்!

(பு.சொ. பூபதி)

இப்படியும் ஒரு மனிதர் இருப்பாரா? என அதிசயமாகக் கூறுவதைக் கேள்விப்பட்டதுண்டு, ஆம்! நான் அப்படிப்பட்ட ஒருவரை நேரில் கண்டேன்! பேசினேன்! உதவி பெற்றேன்!

இளங்கலைப் பட்டப் படிப்பு முடித்த என் மகனின் முதுகலைப் பட்டப் படிப்பிற்காகத் திருச்சியில் ஒரு கல்லூரியில் இடம் கிடைக்க முயற்சித்த போது எங்கள் குடும்ப நட்புக்குரிய T.C. பாலசுப்பிரமணிய ரெட்டியாரின் நினைவு வந்தது.

திருச்சியில் அவர் வீட்டுக்குப் போனோம். செய்தியைக் கூறியதும் என்மகனையும் என்னையும் அழைத்துக் கொண்டு ஒரு வீட்டுக்குச் சென்றார்.

வெளித் தோற்றத்தில் வீடாகத் தெரிந்தாலும் உள்ளே போனதும் தான் அது ஒரு கோயில் என நினைக்குமாறு எங்கும் சாமி படங்களுடன் காணப்பட்டது. முற்றம், கூடம் எல்லாம் தெய்வீகக் களையாக இருந்தது.

அங்கே சாய்வு நாற்காலி ஒன்றில் நாலு முழ வேட்டியுடன் கதர் பனியன் போட்டவராய் நெற்றி நிறைய திருநீறு பூசியவராய் ஏதோ ஓர் ஆன்மீகப் புத்தகம் படித்துக் கொண்டிருந்தார்.

அன்னாரைப் பார்த்ததும் ரெட்டியார் அவர்தம் பாதங்களில் விழுந்து வணங்கினார். நாங்களும் வணங்கினோம். ரெட்டியாரும் அவரும் வாஞ்சையுடன் பேசிக் கொண்டார்கள்.

முடிவில் எங்களை அறிமுகப்படுத்திக் கல்லூரி சேர்ப்புக்குரிய பரிந்துரை பற்றிக் கூறினார். உடனே அப்பெரியவர் சத்திரம் பேருந்து நிலையத்தின் பக்கத்தில் வாழும் அந்தக் கல்லூரியின் சட்ட ஆலோசகரைச் சென்று பார்க்க உத்தரவு தந்தார்கள்.

நன்றியோடு விடைபெற்ற நாங்கள் பெரியவர் சொன்ன அந்தச் சட்ட ஆலோசகர் இல்லம் சென்றோம். இல்லத்தின் முகப்பில் சிலர் காத்திருந்தனர். நாங்கள் சென்ற அரைமணி நேரத்தில் உள்ளே இருந்து

Koviloor Digital Library

வந்த ஒருவர் பாண்டிச்சேரியிலிருந்து வந்தவர்களை ஐயா அழைக்கிறார் என்றார்.

உள்ளே ஆஜானுபாகுவாக இருந்த சட்ட ஆலோசகரைக் கண்டு அறிமுகப்படுத்திக் கொண்டோம். சட்டென்று அவர் "பிள்ளை அவர்கள் சொன்னார்கள்" என்று கூறியதும் பாலைவனத்தில் பால் வார்த்ததாக இருந்தது.

மேலும் நாளை, ரூ. 27,000 (இருபத்தேழாயிரம்) கட்டிக் கல்லூரியில் சேர்ந்து கொள்ளுங்கள்? என்றார்.

நிறைந்த மனத்தோடு நன்றி கூறி, மீண்டும் பரிந்துரைத்த பெரியவரை பார்த்துக் கூறத் திருச்சியின் மையப் பகுதியில் இருந்த அவர்தம் கடைக்கு ரெட்டியார் அழைத்துச் செல்லச் சென்றோம்.

சட்ட ஆலோசகரைப் பார்த்துவந்த விவரம் கூறினோம். எங்களை அடுத்துப் பேசவிடாமல் நல்லதைத் தள்ளிப்போடக் கூடாது, நாளையே இந்தப் பணத்தைக் கட்டிவிடுங்கள் என்று கூறித் தயாராக எடுத்து வைத்ததைப்போல் 27,000 ரூபாய்களைக் கட்டாக என்னிடம் தந்தார்கள்.

எனக்கு உடம்பெல்லாம் வேர்த்துவிட்டது. "நாம் கேட்கவில்லை, வீட்டுக்குப் போய் பணம் எடுத்து வந்து கட்டுவோம்" என்றே எண்ணியிருந்த எனக்கு மணிவாசகர் திருவாசகத்தில் கூறிய அற்புதப்பத்து எனக் கூறியதற்கும் மேலாக அதிசயப் பத்து என்றாரே இதுதானா? என வியந்தேன். ஆம்! இப்படியும் ஒரு மனிதரா? ரெட்டியாருக்கும் அப்பெரியவருக்கும் இருந்த தோழமையே என்னை நம்பிக்கைக்குரியவனாக்கியது என எண்ணி எண்ணி ஆனந்தத்தில் திளைத்தேன். ரெட்டியார் அவர் காலில் விழுந்து வணங்கியதைத் தகும் என நினைத்தேன். சட்ட ஆலோசகர், "பிள்ளை அவர்கள் சொன்னார்கள்" என்றதும் தற்போது 27,000 ரூபாயைத் தயாராக வைத்திருந்ததற்கும் இடையில் தொலைபேசி உரையாடல் நடந்திருந்ததை உணர்ந்தேன்.

பிறகு நடந்ததெல்லாம் கனவா! நனவா! என்றெல்லாம் நினைத்து மனதைத் தேற்றிக்கொண்டு "ஐயா! எங்கள் மீது கொண்ட பற்றுக்கு நன்றி! தங்கள் ஆசியால் ஊருக்குப் போய் வந்து கல்லூரியில் சேர்ந்து விடுகிறோம்" என்று கூறியதும் மீண்டும் அவர் சொன்னார். "நல்லதைத்





Koviloor Digital Library

தள்ளிப்போட வேண்டாம்" என்ற அறவுரையைத் தத்துவமாகக் கேட்டுக் கொண்டு பிரியாவிடை பெற்றோம்.

இவ்வளவும் நடந்த பிறகுதான் நான் திரு ரெட்டியாரிடம் இம்மாமனிதர் யார்? என்றேன். "இவர் ஒரு மகான் மாதிரி! திருச்சியில் எங்கு எந்த ஆன்மீக நிகழ்ச்சியானாலும் இவரின்றி நடக்காது. எல்லோருக்கும் அறிமுகமானவர். பெரிய மனசு படைத்த பெருந்தனக்காரர்! இவரைப் பிள்ளை என்றுதான் எல்லோரும் மரியாதையாகக் கூறுவர். "மூக்கப்பிள்ளை என்பது அவர் முழுப் பெயர்" என்றதும் இப்படிப்பட்ட உத்தமோத்தமப் பெரியவரைப் பார்த்ததும் ஆசிபெற்றதும் நாம் செய்த முன் ஜென்மத் தொடர்போ என எண்ணி மகிழ்ந்தேன். உதவி செய்த திரு ரெட்டியாரிடம் செய்நன்றி கூறி விடைபெற்று ஊர்திரும்பினோம்.

வந்ததும் திருச்சியில் சந்தித்த அந்த மகாப் பிரபுவின் நல்வாக்குப்படி நல்லதைத் தள்ளிப் போடாதவாறு பாண்டிச்சேரியிலேயே முதுகலை சேர்க்கைக்கான அனுமதிக் கடிதம் வந்திருந்ததைப் பார்த்துப் பரவசமுற்று அந்த மகான் இருக்கும் திசை நோக்கி வணங்கினோம்.

ஒருவாரத்திற்குள் நடந்த முதுகலைப் படிப்புச் சேர்க்கைக்குப் பின்னர் திருச்சி சென்று திரு. ரெட்டியாருடன் பெரியவர் மூக்கப்பிள்ளை அவர்களைச் சந்தித்துச் செய்தியைக் கூறினேன். பெருமகிழ்ச்சியடைந்தார்கள். பிறகு இரண்டொரு ஆன்மீக நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டபோதும் அவர்களைச் சந்தித்துள்ளேன். அத்தகைய மகான் தற்போது சிவப்பேறு அடைந்துவிட்டதாகத் தமிழாகரர் திரு. முருகசாமி சொல்லக்கேட்டு அதிர்ந்து போனேன்! அளவிலா மன இறுக்கமும் வேதனையும் என்னை அமுக்கின.

இனி இப்படி ஒரு மாமனிதரை இறைவன் தோற்றுவிப்பானா? என்றே அந்த பரிசுத்த ஆன்மாவுக்கு நினைவாஞ்சலியைச் செய்தேன்.

> *தனக்குக் கிடைக்காத ஒன்று எவருக்கும் கிடைக்கக் கூடாது என்று நினைப்பவன் மனிதகுலத்தின் எதிர்நிலையில் பயணிப்பவன்.*
>
> *தான் பெறாததை உலகம் பெறட்டும் என்று நினைப்பவனே மனித குலத்தின் முன்னேற்றத்திற்கு வித்திடுகிறான்.*
>
> – தவத்திரு பொன்னம்பல அடிகளார்

Koviloor Digital Library

# திருப்பாசுரமும் தத்துவ விசாரணையும்

(தருமையாதீனப்புலவர். தா. குருசாமி தேசிகர்)

திருப்பாசுரம் திருவேடகம் வைகை ஆற்றங்கரையில் தோற்றம் பெற்றது. அதனை அருணந்திசிவம் "மெய்ஞானம்" என்று அடையாளங் காட்டுகின்றார். "பாண்டியன் கேட்க கிளக்கும் "மெய்ஞானம்" என்று இருபா இருபஃது இயம்பும். மதுரை வைகையில் இட்ட ஏடு திருவேடகம் வைகைக் கரையில் சென்று ஏறிஇருந்தது என்பது தத்துவ விசாரணையைக் குறிக்கும் குறியீடாகும். இத்தத்துவ விசாரணை எப்பொழுது தொடங்கும்?" அதனை தேவிபிரசாத்சட்டோபாத்யாயா, வாத்சாயனர் கூற்றை வைத்து இவ்வினாவிற்கு விடையளிக்கிறார் : தத்துவ விசாரணை யாது?

"முழுமையாக அறியப்பட்ட ஒன்றுக்கு தத்துவ விசாரணை தேவையில்லை; அதேபோல் முழுவதும் அறியப்படாத ஒன்றுக்கும் தத்துவ விசாரணை தேவை இல்லை. எது குறித்து மட்டுமே தத்துவ விசாரணை தேவை என்கிறர் வாத்சாயனர். இந்த ஐயம் என்பது முற்றிலுமான அறியாமைக்கும், முற்றிலுமாக அறிந்ததற்கும் இடையிலுள்ள இடைவெளியில் நிலவுகிறது. ஐயங்கள் பலவகைகளில் இருக்கின்றன. தத்துவாதிகளின் ஐயம் என்பது தனிக்கவனத்திற்குரியது. ஒன்றைப் பற்றி முரண்பட்ட வரையறுப்புகள் வருகின்றன. ஒரு கருத்து அதன் எதிர்க்கருத்துடன் முரண்படுகிறது. இரண்டும் ஒன்றை ஒன்று மறுக்க விரும்புகின்றன.

அப்பொழுது திறனாய்வு கொண்ட விசாரணை வருகிறது. அதுதான் தத்துவஇயலின் தொடக்கம்" (What is living and what is dead in Indian Philosophy. p.7.)

**வாது செய்த வாரணம் :**

சம்பந்தர் ஒருவரே வாது செய்த வாரணம் என்று அடையாளப்படுத்தப்பட்டிருக்கிறார். வாதவூரரும் தில்லையில் பௌத்தரோடு வாது செய்ததாக அவரது திருச்சாழல் பாடல்கள் கொண்டு





Koviloor Digital Library

நினைவுறுத்துவார்கள். சைவ சமய சாரியர்களில் இருவரே வாது செய்திருக்கின்றனர். சம்பந்தர் சிவனிடம் "வாது செய்யத் திருவுள்ளமே?" என்று வேண்டுதல் செய்துள்ள பதிகம் தெரிவிக்கின்றது. அதேபோல சம்பந்தர் திருத்தெளிச்சேரியில் பௌத்தரோடு வாது செய்த செய்தியை விவரமாகப் பெரியபுராணம் தெரிவிக்கின்றது. இதுவரையில் பௌத்தம், ஜைனம் தான் நாத்திகம் என்று நினைந்திருந்த நமக்கு, உண்மையான நாத்திகம் ஆசீவகம் ஆகும் என்று தமிழ்ப்பல்கலைக் கழகப் பேராசிரியர் முனைவர் க. நெடுஞ்செழியன் ஆய்வு செய்துள்ளது. நாம் அறிய வேண்டிய ஒன்றாகும் :

**நாத்திகம் யாது?**

"நாத்திகர்" எனும் சொல் உலகாய்தர்களைக் குறித்து வழங்கினாலும் இது பரந்த பொருளைக் கொண்டதொரு சொல்லாகும். கற்றற்குரிய கல்விமுறைகளைப் பட்டியலிடும் சுக்கிரநீதி, வலிமையான தருக்கவியலை உள்ளடக்கிய நாத்திக சாத்திரம் பற்றிக் குறிப்பிடுகிறது. "நாத்திக சாத்திரம்" என்பது கடவுளையும் "வேதத்தையும்" மறுப்பதாகும். "இயற்கை விதிகளையும் (Naturels Law) மனதையும் பற்றி விளக்குவதே நாத்திக சாத்திரம்". என்று சுக்கிரநீதிசாரமும், குறிப்பிடும். காலப்போக்கில் வேதத்தை மறுப்பதே "நாத்திகம்" என்று வழக்காறு உருவாகிவிட்டது என்று சங்ககாலத் தமிழர் சமயநூலார் கூறுவர்.

**நாத்திகம் பற்றி அப்பர் :**

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள்போல் வரும் பஞ்சமாபூதங்கள்
தடையொன்றின்றியே தன்னடைந்தார்க் கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே"

என்ற அப்பரின் தேவாரம், உலகியலையே மெய்யென்று கருதும் பொய்யாகிய நாத்திகம் பேசாது ஆனைக்கா அண்ணலை வணங்குங்கள் என்று கூறும். "நடையை" என்பது உலக நடையை மெய்யென்று தலையானது என்று எண்ணி; நாத்திகம் - கடவுளும் மறுபிறப்பும் இருவினையும் முதலியவற்றை இல்லை என்று கூறும் உலகாய்தம். கடவுளும் உயிரும் வீடுபேறும் பொய்யென்று கூறும் - கொள்கை என்று தருமையாதீன 5ஆம் திருமுறையில் காணப்படும்.

**நாத்திகம் பற்றி வாதவூரர் :**

Koviloor Digital Library

திருவாசகம், போற்றித் திருவகவலில்,
"*ஆத்தமானார் அயலவர் கூடி*
*நாத்திகம்பேசி நாத்தழும் பேறினர்*" என்ற
வரிகட்குரிய உரை அறியத்தக்கதாகும். ஆத்தம் – மெய்ம்மை. ஆனார் – நீங்காதவர்; உறுதி உரைக்கும் நண்பர். நாத்திக உரைகளாவன : இப்பொழுது கிட்டிய செல்வமும், மாடமாளிகையும், மகளிரும், முதலாய பொருள்களைத் துறந்து, இனி எய்தற்பாலதாய, கடவுளை அடைதற்கு இப்பொழுது விரும்புதல் வேண்டா; பின்னர்ப் பார்த்துக் கொள்வோம் – என்றார் போல மெய்ந்நெறியினை நெகிழவிடக் கூறுவனவாம். கடவுளும் வினைப்பயனும், மறுபிறப்பும் போல்வனவற்றை, "இல்லை" என மறுத்துரைக்கும் பண்பினை நாத்திகர் என்று தருமபுர ஆதீன உரைவிளக்கம் நல்கும். சுந்தரரும் தன் பங்கிற்குத் திருவாரூர்த் தேவாரத்தில் "கண்டதே கண்டதே காமுறும் கொடியேன் நான்" என்று அருளிச் செய்வார்.

**இந்திய தத்துவ ஞானம்**

இந்நூலை எழுதியவர் கி. லட்சுமணன் என்பவர். இந்நூலின் முதல் ஆய்வு உலகாயதம் ஆகும். இதனை அடுத்தே ஏனைய சமய தத்துவங்களை ஆராய்ந்து எழுதுகின்றார். இவ்வுலகாயதம் இறைவனும் நிலையாய உயிரும் இல்லை ; மறுமையும், மறுமையிற் பயன்தரும் பாவ புண்ணியமும் இல்லை. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்பதே அவன் அடையும் முடிவு. உலகம் மட்டும் உள்ள பொருள் எனக் கொண்டமையால் இக்கொள்கைக்கு உலகாயதம் என்ற பெயரும், சர்வாகர் என்ற தத்துவஞானியால் முதன் முதல் இக்கொள்கை தாபிக்கப்பட்டபடியால், "சார்வாகம்" என்ற பெயரும் ஏற்படலாயின என்பது ஆசிரியர் ஆய்வாகும். இக்கொள்கையே சுந்தரர் கண்டிப்பதுபோல், "கண்டதே கண்டதே காமுறுவன்" என்று பிரத்தியட்சபிரமாணத்தை வழிமொழிவார்.

**ஆசீவகம் :**

தமிழகத்தில் தோன்றியது "ஆசீவகம்" என்பார் ஆய்வாளர். ஆசீவகத்தின் அடித்தளமாக அதன் நிறுவனர், மத்கலியின் ஊழியலாகும். இதுபற்றி ஆய்வு செய்தவர். ஏ.எல்.பாசம் என்பவர் என்றும், மற்கலி, "விட்டுத்தராத ஊழியலார்" என்றும் (Determunist)

Koviloor Digital Library

உலகை இயக்கும் கூறாகவும், ஊழை உயர்த்திக் காட்டியவர் என்றும் ஆய்வாளர் மேற்கோள் காட்டுவார். இம்மேற்கோள், கணியன் பூங்குன்றனார் புறநானூற்றுப் பாடலில் முழுமைபெறக் காணலாம் என்பர்.

*"கல்பொருதிரங்கு மல்லற்பேர் யாற்று*
*நீர்வழிப்படும் புணைபோல் ஆருயிர்*
*முறைவழிப்படூஉம் என்பது திறவோர்*
*காட்சியில் தெளித்தனம்"* இப்பாடலின் கருத்தை அருங்கலச் செப்பு வழிமொழிவதையும் மேற்கோள் காட்டுவார்.

**சாரசம்கிதை குறிப்பன :**

"உயிர்களின் தோற்றத்திற்கோ, பிறப்பிற்கோ முதற் காரணம் எனச் சொல்லத் தக்கது எதுவும் இல்லை; அவை தோற்றம் கண்டது தற்செயல் நிகழ்வேயாம். அதைப்போலவே உயிர்களின் முடிவும் தற்செயலாகவே அமையும். கருமவினை என்பதோ, இப்பிறவியில் நன்மை செய்தால், மறுபிறவியில் நன்மை கிடைக்கும் என்பதோ, இப்பிறவியில் தீமை செய்தால் மறுபிறவியில் தீமை கிடைக்கும் என்பதோ எதுவும் இல்லை. எல்லாமே தற்செயலேயன்றி வேறில்லை" என்று "அருங்கலச்செப்பு" கூறுவதை – இக்கோட்பாட்டை சாரசம்கிதை "நாத்திகர்கள்" என்று கூறும் என்று ஆய்வாளர் கூறுவார்.

**கருத்து மாறுபாடு :**

I திருவள்ளுவர் வாழ்விற்குக் கருமத்தை முன்னிலைப்படுத்துவார்.

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"

என்ற குறளை நாம் மேற்கோள் காட்டி, பெருமையும் சிறுமையும் தாம்தாம் வரும் என்று ஆசீவகக் கருத்தை மறுப்பதாகக் கொள்ளலாம்.

II சீவக சிந்தாமணியில் "வினைப்பயனை" ஒப்புக்கொண்டு ஆசீவகக் கருத்தை, "சாதலும் பிறத்தல் தானும் தம்வினைப் பயத்தினாகும்" என்று மறுப்பதைக் கொண்டு ஜைனம் வினைப்பயனுக்கு முக்கியத்துவம் கொடுப்பதை அறியலாம். "வினையின் வந்தது உடல் : வினைக்கு வினைவாயது இவ்வுடல்" என்ற தொடரும் தற்செயலை ஏற்கவில்லை.

III சேக்கிழார் செய்வினைப் பயன் உண்டு என்பார். அதோடு ஆசீவகம், ஜைனம், பௌத்தம் முதலிய மதங்களின் முடிவுகளும்,

Koviloor Digital Library

தமிழ்நெறிக்குரியதன்று என்று சாக்கிய நாயனார் புராணத்தில் ஆய்ந்து முடிவு கூறுவார். அப்பாடல் :

"செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்" எனக்கொண்டே
"இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கில்லை" என
உய்வகையாற் "பொருள் சிவன்" என்றருளாலே உணர்ந்தறிந்தார்,

என்ற பெரியபுராணப்பாடல், சைவநெறியின் முடிந்த முடிபை வெளிப்படுத்தும்.

**ஏதுவாதிகள் :**

"ஏது" என்னும் தமிழ்ச் சொல்லிற்குக் காரண - காரிய விதிமுறை என்பது பொருளாகும். எந்த ஒன்றையும் காரண காரிய முறையில் விளக்குபவர்களே "ஏதுவாதிகள்" என்பர். இவர்களின் கோட்பாடு ஏது சாத்திரம் எனப்பட்டது. பாகவத புராணம், இவர்களைப் "பாசாண்டிகள்" எனக் குறிக்கும். பாகவத புராணத்தின்படி புத்தசமயத்தவரும் ஜைன சமயத்தவரும் கூடப்பாசாண்டிகளே ஆவர். எனவே பாசாண்டிகள் என்பவர் தருக்கவியலில் மிகவும் தேர்ந்தவர்கள் என்பது தெளிவாகும்" என்று சங்ககாலத் தமிழர் சமயம் நூலில் ஆய்வு செய்வார்.

**சம்பந்தரின் திருப்பாசுரம் :**

திருஞானசம்பந்தர் அருளிச் செய்த "திருப்பாசுரம்" தமிழகத்தில் கொடிகட்டிப் பரவிய, ஆசீவகம், ஜைனம், புத்தம் முதலிய சமயங்களின் கோட்பாடுகளைப் புறங்கண்டு, தெற்றென்று தெய்வந் தெளிவித்த உயர்தத்துவ விசாரணை முடிபாகும்.

I. ஆசீவகம் "ஊழ்வினை" முடிபைவெல்லமுடியாது என்று கூறிய தத்துவமுடிவை சம்பந்தர் திருப்பாசுரப்பாடலில் சண்டீசர் ஊழையும் உப்பக்கம் வென்ற வரலாறு மூலம் திருவருள் இருந்தால் வெல்லலாம் என்று முடிவு அருளினார். இவரை வழிமொழிந்த சுந்தரர் -

"*திருவாஞ்சியத்துறையும் ஒருவனார்*
*ஊழ்வினை நலிய ஒட்டோரே*" என்று அருளி விதியை வெல்லலாம் என்றார்.

II. வேதம், புராணம் சிவனை "வேதமுதல்வனாக"க் காட்டிய சூதமுனிவர் செயல்மூலமாக, புறச்சமயிகள் ஸ்ரீ புராணங்கள் புறந்தள்ளப்பட்டன. இதனைச் சுட்டியவர் சம்பந்தர்.

Koviloor Digital Library

III. நிறைவாக, வாழ்முதலைச் சிவன் என்று முடிவுகூறிய சம்பந்தர், தெற்றென்று தெய்வந்தெளிவிக்காத குறையைப் போக்கி பெற்றொன்று உயர்த்திய பெருமானைப் பெருமான் என்று அடையாளப்படுத்தி உய்வித்தவாறு நினைவுகூரத்தக்கது.

**துக்கநீக்கம் எப்படி வரும் :**

திருப்பாசுரம் 12 பாடல்களில் முதற்பாடலில் "அரன் நாமமே சூழ்க" "உலகெலாம் என்று முன்மொழிந்த சம்பந்தர் காண்டல், கருதல்அளவைகள் மூலமாக சிவத்தை அடையாளங்காட்டி, அச்சிவத்தை, ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும், சோதிக்க வேண்டாம் என்றும், பெருந்துக்கம் வேண்டாம் என்று விரும்பும் சாதுக்கள்" "வாழ்முதலாகிய சிவத்தை வணங்க இப்பொழுதே ஒருப்படுங்கள்" என்று கூறும் திருப்பாசுரப்பா துக்கநீக்கம் விரும்புவோர் நினைவுகூரத்தக்க பாடலாகும். அப்பாடல் :

*ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும் சோதிக்க வேண்டா*
*சுடர்விட்டுளன் எங்கள் சோதி*
*மாதுக்கம் நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்!*
*சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே*

என்ற சம்பந்தர் திருப்பாசுரப்பாடல் தத்துவ விசாரணையில் புறச்சமயிகளுக்கு அன்பழைப்பு விடப்பட்டபாடலாகும்.

ஆரியத்தொடு செந்தமிழ்ப்பயன் அறியாதவர்கட்கு

அறிவுகொளுத்திய சம்பந்தரின் திருப்பாசுரம், அறிந்தவர்கட்கு பயன்தரும் அமுதசுரபியாகும்.

**செந்தமிழ்க்குமரகுருபரர் :**

வடநாடு சென்று தமிழ்நெறிபரப்பிய செந்தமிழ்க்குருபரர் தெற்றென்று தெய்வம் தெளிவித்த பொன்மொழிகள் நான்குவரி திருப்பாசுர தத்துவ விசாரணை முடிபாகும். அவை :

*அருவமும் உருவமும் ஆகிநின்றும்அவ்*
*அருவமும் உருவமும் அகன்று நின்றனை*
*சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றும்அச்*
*சொல்லையும் பொருளையுந் துறந்து நின்றனை*

என்ற வரிகள் புறச்சமயிகட்குரிய விடையாகும்.

---

Koviloor Digital Library

# உலகத் திருக்குறள் பேரவை, தூத்துக்குடி

தூத்துக்குடியில் "திருவள்ளுவர் இன்று வந்தால்" கவியரங்கம் நடைபெற்றது.

உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் சார்பில் "திருவள்ளுவர் இன்று வந்தால்" எனும் தலைப்பில் சி.எம்.மேல்நிலைப் பள்ளியில் பொற்கிழிக்கவிஞர் சவகர்லால் தலைமையில் சைவநெறி காந்தி, அரிமா தன்ராசு ஆகியோர் முன்னிலையில் நடைபெற்றது.

உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் செயலாளர் திருக்குறள் மோ. அன்பழகன் வரவேற்றுப் பேசினார்.

திருக்குறள் உரையாசிரியர் தமிழறிஞர் வாய்மையார், புலவர் சங்கரலிங்கம், ஆசிரியர் தேவிகா பொன்னம்பலம், பேராசிரியர் நீதிச்செல்வன், கவிஞர் வானரமுட்டி பாலு ஆகியோர் கவிதை பாடினார்கள்.

கூட்டத்தில் மாவட்ட வருவாய் முன்னாள் அலுவலர் சக்திவேல், பேராசிரியர் குமரிக்கண்ணன், ஆசிரியர் மனோ சேவியர், இன்ஜினியர் அருள்செல்வன், தாழை மணி, கிருட்டிணன் மற்றும் பேரவை உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

கவிஞர் இளமுருகு நன்றி கூறினார்.



"மக்கள் சிந்தனை"யில் வெளிவரும் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றில் அமைந்துள்ள கருத்துக்களுக்கு அவற்றை எழுதியவர்களே பொறுப்பாவர்.

– ஆசிரியர்

Koviloor Digital Library

# மலைக்கோட்டை மாமனிதர்க்கு நினைவு அஞ்சலி

(தருமையாதீனப்புலவர். தா. குருசாமி தேசிகர்)

மலைக்கோட்டை மூக்கபிள்ளை மலர்ந்தஇடம் சிராப்பள்ளி!
மாநிலத்து மககட்கெலாம் மாத்தமிழின் ஒளிவிளக்கு!
நிலையான குறிக்கோளில் நீணெறியாம் சிவநெறியில்
நிலையான உளத்தோடு பயணித்த பண்பாளர்!
அலைஅலையாய்ப் பொருளீட்டும் தமிழ்வணிகர் பலருமேதான்
அருளுள்ளம் முகிழ்க்காமல் அரும்பொருளை ஈட்டுகிறார்!
கலையுள்ள மாமனிதர் சிறுவணிகர் என்றாலும்
கடைவைத்தார் பலர்நாண! நடைகாட்டிப் பொருளீந்தார்!

அருணெறித் தந்தைக்கு ஆணிவேர் அருணெறியில்!
ஆதீனம் அனைத்திற்கும் உப்பமைந்த நன்றியாளர்!
திருமுறையைப் புரப்பவரில் இராசராசன்! சைவநெறி
தெருவெலாம் பரப்புவதில் ஈழத்து நாவலராம்!
தருமைதந்த தேவார உரைக்குறிப்பு வெளிவரவே
தம்பங்காய் ஒருபகுதி ஈத்துவந்த மூக்கபிள்ளை
பெருமையினால் பொதியமலை பேர்லுயர்ந்த பெருஞ்சீரார்!
பெரும்புகழை ஈங்கிருத்தி எப்படித்தான் பிரிந்தாரோ?

சைவமும் தமிழும் தழைத்தே ஓங்க
சொற்செயல் அனைத்தோடுடனே
பெரும்பணிசெய்த மாமனிதர் இவர்
சிவநெறிச் செல்வர் இன்று
வானோர்க்குலகம் மிகுந்த இடத்தில்
ஏனோர் வியக்கச் சென்றார்! வாழ்க!



தாமே உண்பதைவிட, உண்பிக்க உண்பது சுவையுடையது.
தாமே சிரித்து மகிழ்வதைவிட,
மற்றவர் மகிழ்விக்க மகிழ்வது மாண்புடையது.
நாமே, நம்மை வியத்தலைவிட,
மற்றவர்கள் வியந்து பாராட்டுதல் சிறப்புடையதாகும்.

— அருள்நெறித்தந்தை

Koviloor Digital Library

# உலகத் திருக்குறள் பேரவை கோபி வட்டக்கிளை

உலகத் திருக்குறள் பேரவை கோபிவட்டக்கிளையின் நாற்பத்தி நான்காவது ஆண்டு விழா 22.07.2017 சனிக்கிழமை கோபி, முத்துமகால் இணை, இராமாயம்மாள் திருமண மண்டபத்தில் நடைபெற்றது. முற்பகல் 9.30 மணி அளவில் திரு. ந. வெங்கடாசலம் தலைமையில் கொடியேற்றம் நிகழ்ந்தது. அரிமா கோ.கு. சுப்பிரமணியம் வரவேற்புரை நிகழ்த்தினார். மருத்துவர் ம. செந்தில்நாதன் கொடியேற்றினார். முனைவர் கே.ஆர்.ரங்கராசன், திரு. அபிராமி ந.காளியப்பன் திரு. கோ. ஜெகதீசுவரன் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

பின்னர் மேனாள் தலைவர் இறைநிலைச் சான்றோர் பேராசிரியர் கா.அரங்கசாமி அவர்களின் உருவப்படத்தை உலகத் திருக்குறள் பேரவைத் தலைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் திறந்துவைத்தார். முனைவர்.நீ.வ.கருப்புச்சாமி நினைவுச் சிறப்புரையாற்றினார். அதன்பின் திரு.கா.அ.செல்வம் அவர்களைப் பாராட்டி விருது வழங்கப்பட்டது. திரு.கோ.ப. வெங்கிடு பாராட்டுரை வழங்கினார். திரு.கா.அ.செல்வம் ஏற்புரையாற்ற திரு.கு.முருகேசன் நன்றியுரையுடன் முதல் நிகழ்ச்சி இனிது நிறைவெய்தியது.

பின்னர், காலை 10.30 மணி அளவில் நிறைவு விழா தொடங்கியது. பேரா.திரு.இரா.க. மாணிக்கம் தலைமை வகித்தார். புலவர் அர.திருநாவுக்கரசு வரவேற்புரையாற்றினார். பேரா.திரு.செ.சு. பழனிச்சாமி விழாத் தொடக்கவுரையாற்றினார். திரு.கு.செ.பச்சையப்பன் திரு.பி.பி. காளியண்ணன், திரு.கோ.மு.வெங்கடேசுவரன், திரு. தங்கம் பி.எம்.பழனிச்சாமி, மருத்துவர் க. ஆண்டமுத்து, மருத்துவர். க.சங்கர், முனைவர்.பெ. கந்தசாமி, மருத்துவர் அர.அன்பரசு, திரு.எஸ்.ஆர். பழனிச்சாமி ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

உலகத் திருக்குறள் பேரவைத் தலைவர் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கி சிறப்புப் பேருரையாற்றினார். முனைவர். எண்ணம் மங்கலம் அ. பழனிச்சாமி நிகழ்ச்சி இணைப்புரையாற்றினார். புலவர் கு.சண்முகம் நன்றியுரை நவில நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவெய்தியது.

---

Koviloor Digital Library

# பைந்தமிழ்ப் பாரதி

(கவிச்சுடர். அழகுதாசன்)

பாட்டுக் கோட்டை கட்டி நம்மை
உருக வைத்தவன் – அமுதம்
பருக வைத்தவன்!
நாட்டுக் காக நித்தம் பாடி
வேட்டு வைத்தவன் – விடுதலை
விளைச்சல் செய்தவன்!
தியாக மென்னும் தேசத் தொண்டில்
ஈடுபட்டவன் – மக்களுக்குப்
பாடு பட்டவன்!
நாடு முழுக்கச் சுதந்திரக் கனலை
மூட்டி விட்டவன் – பாட்டால்
மோதி நின்றவன்!
அடிஉதையும் ரத்தம் சிந்தி
அல்ல்ல் உற்றவன் – நாளும்
உள்ளம் நொந்தவன்!
இடி போல எதையும் தாங்கி
ஏற்றம் பெற்றவன் – சுதந்திர
ஏடுகள் கற்றவன்!
உடல்பொருளை இன்னுயிரை
இழந்து வாடினான் – வாழ்வை
மறந்து வாடினான்!
கடலாகி மலையாகிக்
காற்றாய் வாழ்கிறான் – பாரதி
ஊற்றாய் வாழ்கிறான்!
நாடு போற்றும் தியாகச் சுடரை
நித்தம் வாழ்த்துவோம் – என்றும்
நெஞ்சில் வாழ்த்துவோம்!
பாட்டுப் பாட்டன் பாரதியைப்
பணிந்து வணங்குவோம் – நினைவை
பாடி வணங்குவோம்!

---

Koviloor Digital Library

# கருப்பையூர் வாராமற் கா!

(கவிச்சுடர்.ச.மு. விமலானந்தன்)

அருளாளர்கள் அனைவரும் இறைவனிடம் மீண்டும் பிறவாத பேரின்ப நிலையையே (வீடுபேற்றையே) வேண்டுவர். கப்பல் வாணிகம் செய்த பெருஞ்செல்வரான பட்டினத்தார் (திருவெண்காடர்) "காதற்ற ஊசியும் கடைவழிக்கு வாராது" என்ற வைரவரியால் முற்றும் துறந்த துறவியானார். அவர் தேவாரம் பாடின மூவர் (திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்) போலப் பல திருத்தலங்களுக்குச் சென்று பக்திப் பாடல்களைப் பாடியுள்ளார்.

நான் சில மாதங்களுக்கு முன் புதுவைக்கு அருகில் தமிழகப் பகுதியில் உள்ள "இரும்பை" என்ற திருத்தலத்தில் இருந்த சிவாலயத்தைக் கண்டு மகிழ்ந்து இறைவனை வணங்கினேன். அந்தக் கோவிலில் உள்சுற்றுச்சுவரில் எழுதப்பட்டிருந்த பட்டினத்தாரின் பாடலைப் படித்து மகிழ்ந்தேன். (அதன் எதிர்ப்புறத்திலிருந்த சுவரில் திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பாடல்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அதன் கீழ் "இரும்பை மாகாளம்" எனக் குறிக்கப்பட்டிருந்தது. ஆனால் அந்த ஊர் இன்று "இரும்பை" என்றே வழங்கப்படுகிறது.

நான் படித்து எழுதிக்கொண்டு வந்த பட்டினத்தார் பாடல் வருமாறு :

"மாதா உடல் சலித்தாள்! வல்வினையேன் கால் சலித்தேன்;
வேதாவும் கைசலித்துவிட்டாளே! – நாதா
இரும்பையூர் வாழ்சிவனே! இன்னம் ஓர் அன்னை
கருப்பையூர் வாராமற் கா"

(பட்டினத்தார் பாடல்கள் என்ற நூலில் "இருப்பையூர்" என்று உள்ளது. எதுகைக்காக இப்படி மருவி (மாறி) வரலாம்).

இதே கருத்துடைய பாடலைக் கவியரசர் கண்ணதாசன் ஒரு திரைப்படத்துக்காக (சரஸ்வதி சபதம்) எழுதியுள்ளார். அந்தப் பாடல் வருமாறு.

"பெற்றவள் உடல் சலித்தாள்;
பேதை நான் கால் சலித்தேன்
படைத்தவன் கைசலித்து ஓய்ந்தான் – அம்மா
இனி மீண்டும் ஓர்தாய் வயிற்றில் பிறவேன் அம்மா"

இப்பாடலில் பட்டினத்தார் பாடலில் உள்ள கருத்து மட்டுமன்று, சொற்றொடர்களும் வந்துள்ளதை அறிந்து வியந்து மகிழ்கிறேன். அந்தக் கவிஞரைப் பாராட்டுகிறேன்.

---

Koviloor Digital Library

# முனைவர் நயம்பு அறிவுடை நம்பி நடத்தும் திருக்குறள் ஒப்பித்தல் போட்டி

(செஞ்சி வட்டக் கல்வி நிறுவனங்களுக்கு அறிவுப்புச் செய்தி)

முனைவர். நயம்பு அறிவுடைநம்பி அவர்கள் தம் எழுபத்தைந்தாம் அகவையைக் கொண்டாடும் வகையில் திருக்குறள் ஒப்பித்தல் போட்டி அறிவித்துள்ளார். செஞ்சி வட்டத்தில் உள்ள தொடக்க, நடுநிலை, உயர்நிலை, மேனிலைப் பள்ளிகள், கல்லூரிகளில் பயிலும் மாணவ மாணவியர் எவரும் கலந்து கொள்ளலாம்.

அறத்துப்பால் முழுமையும் ஒப்பிப்போர்க்கு ரூபாய் 380உம் சான்றிதழும் வழங்கப்பெறும். பொருட்பால் முடிய 1080 பாக்கள் ஒப்பிப்போர்க்கு ரூபாய் 1080உம் சான்றிதழும் வழங்கப்பெறும். 1330 பாக்கள் ஒப்பிப்போர்க்கு ரூ. 1330உம் சான்றிதழும் வழங்கப்பெறும். நயம்பாடியில் 14.01.18 இல் நடைபெறும் ஐம்பெரும் விழாவில் பரிசும் சான்றிதழும் வழங்கப்பெறும். 2017 நவம்பருக்குள் பெயரை அறிவித்தால் பேரவையினர் தங்கள் பள்ளிக்கே வந்து ஒப்பித்தலை ஆய்வு செய்வர்.

அறிவிப்பாளர் முகவரி & கடிதம்:

முனைவர். **நயம்பு. அறிவுடைநம்பி**
மாவட்டச் செயலாளர்
உலகத் திருக்குறள் பேரவை
நயம்பாடி - 604 157
செஞ்சி வட்டம்

பொருள் : மாணவ, மாணவியரைத் திருக்குறள் ஒப்பிக்கச் செய்தல்.

பேரன்புடையீர்!

எளியேன் ஒன்பதாம் வகுப்புப் படித்தபோது திருக்குறளை வாங்கி வாசிக்கத் தொடங்கினேன். இன்றும் வாசிப்பு தொடர்கிறது. 38 ஆண்டுகள் கல்விப் பணியைச் சீருடனும் சிறப்புடனும் ஆற்றினேன். தவத்திரு குன்றக்குடி அடிகளாரை 1968ஆம் ஆண்டு பள்ளியில் பேச வைத்தேன். திருக்குறளார் வீ. முனுசாமி அவர்கள் தலைமையில் திருக்குறள்வழித் திருமணம் செய்து கொண்டேன். அடிகளார் 1974ஆம் ஆண்டு தொடங்கிய திருக்குறள் பேரவையின் உறுப்பினன். 1984இல் செயற்குழு உறுப்பினர். 1984 முதல் தெ.ஆ. மாவட்டப் பேரவையின் செயாளராகப் பணியாற்றி வருகிறேன்.

திருக்குறள் வகுப்பு, கருத்தரங்கம், விழாக்கள் எனத் தனித்தும், பலருடன் இணைந்தும் நடத்தி வருகிறேன். எங்கள் ஊரில் தொடர்ந்து 37 ஆண்டுகளாகத் திருக்குறள் போட்டிகள் நடத்தித் தைத்திங்கள் முதல் நாளில் பரிசளித்து வருகிறேன். 2017-2018ஆம் ஆண்டு எனக்கு

Koviloor Digital Library

எழுபத்தைந்தாம் அகவை ஆண்டாகும். இதனையொட்டி செஞ்சி வட்டத்திலுள்ள மாணவ மாணவியரிடையே திருக்குறள் ஒப்பித்தல் போட்டி நடத்தித் தை முதல் நாளில் பரிசளிக்க உள்ளேன்.

திருக்குறள் 1330 முழுவதும் ஒப்பிப்போர்க்கு பரிசாக ரூ. 1330 உம் சான்றிதழும் வழங்கப்பெறும். பொருட்பால் முடிய அதாவது 1080 பாக்கள் ஒப்பிப்போர்க்குப் பரிசாக ரூ. 1080 உம் நற்சான்றிதழும் வழங்கப் பெறும். அறத்துப்பால் 380 ஒப்பிப்போர்க்குப் பரிசாக ரூ. 380உம் நற்சான்றிதழும் வழங்கப்பெறும். மற்றவர்க்குச் சான்றிதழ் மட்டுமே வழங்கப்பெறும். எத்தனை பேர் ஒப்பித்தாலும் அத்தனை பேருக்கும் பரிசும், சான்றிதழும் 2018ஆம் ஆண்டு பொங்கல் விழாவின் போது நயம்பாடியில் வழங்கப்பெறும்.

வான்புகழ் வள்ளுவத்தை மாணவ, மாணவியரிடையே கொண்டு செல்ல வேண்டும். தாங்கள் சிறப்பாகப் பணியாற்றும் கல்விப் பணியுடன், இத்திருக்குறள் பணியிலும் ஈடுபாடுகாட்டி மாணவரை ஊக்குவிக்க வேண்டும். தமிழாசிரியர் மற்றும் பள்ளியின் பிற ஆசிரியர்களின் துணை கொண்டு இதனை வெற்றிகரமாக நடத்தித்தர வேண்டுகிறேன். இத்திட்டத்தை மாணவ மாணவியரிடையே அறிவித்துப் பங்கு கொள்ளச் செய்யக் கனிவுடன் வேண்டுகிறேன். 2017 திசம்பர் முதல் வாரம் ஒப்பிக்கும் மாணவ மாணவியரை எங்கள் குழுவினர் நேரில் கேட்டு முடிவு எடுப்பர். ஒப்பிக்கும் மாணவர் பட்டியலை 2017 நவம்பருக்குள் அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

## உலகத் திருக்குறள் பேரவைப் பொதுச்செயலாளர் புலவர்.திரு.தி.சு.மலையப்பனார் துணைவியார் மறைவு

உலகத் திருக்குறள் பேரவைப் பொதுச் செயலாளர் புலவர்.திரு.தி.சு.மலையப்பனாரின் வாழ்க்கைத் துணைவியார் திருமதி.பருவதம்மாள் 21.6.2017 அன்று சென்னையில் காலமானார். அப்பெருமாட்டியின் மறைவு குறித்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது. அவர்தம் மறைவால் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் புலவர்.திரு.தி.சு.மலையப்பனார்க்கும் அவர்தம் குடும்பத்தினருக்கும் "மக்கள் சிந்தனை" ஆறுதலையும் இரங்கலையும் புலப்படுத்திக் கொள்கிறது. மறைந்த திருமதி. பருவதம்மாளின் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

Koviloor Digital Library

# குன்றக்குடி ஆதீனம் மகாகுருபூசை விழா

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகளின் 692ஆம் ஆண்டு மகாகுருபூசைவிழா சிறப்பாக நிகழ்ந்தது.

ஏவிளம்பி ஆண்டு ஆவணித்திங்கள் 22-ஆம் நாள் (7.9.2017) வியாழக்கிழமை பூரட்டாதித் திருநாளில் திருவண்ணாமலையில் உள்ள ஆதி குருமுதல்வர் குருமூர்த்தத்தில் சிறப்பு வழிபாடும், அன்பர்கள் திருக்கூட்ட ஊர்வலமும் சிறப்பாக நடைபெற்றன.

மறுநாள் ஆவணித்திங்கள் 23ஆம் நாள் (8.9.2017) வெள்ளிக்கிழமை குன்றக்குடியில் சமய இலக்கிய விழா சிறப்பாக நடைபெற்றது. 8.9.2017 காலை 7.00 மணி முதல் 8.30 மணிவரை குருமூர்த்த வழிபாடு, அருள்தரு காளத்திநாதர் சிறப்பு வழிபாடு, அருள்தரு சண்முகநாதப்பெருமான் வழிபாடு ஆகியன நடைபெற்றன. 8.30 மணியளவில் குருமுதல்வர் திருவுருவப்படம் திருவீதி உலா எழுந்தருளியது. அதுபோது பொதுமக்களும், பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியரும் திருவீதி உலாவில் கலந்து கொண்டனர்.

காலை 10.00 மணியளவில் ஆதீனக் கொலு மண்டபத்தில் தொடக்கவிழா தொடங்கியது. திரு.அரு. மாசிலாமணி ஓதுவார் இறைவணக்கம் பாடினார்.

46வது குருமகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் விழாத் தலைமையேற்றார்கள். தமிழாகரர் திரு.தெ. முருகசாமி அவர்கள் "சுந்தரரின் தோழமை நெறி" என்ற தலைப்பிலும் தமிழாகரர் திரு.மு. இராசரத்தினம் அவர்கள் "அப்பரடிகளின் தொண்டு நெறி" என்ற தலைப்பிலும் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசி உரையுடன் முற்பகல் நிகழ்ச்சி சிறப்பாக நிறைவெய்தியது.

பிற்பகல் 2.30 மணியளவில் "கலைமாமணி" முனைவர் திரு.தி.சுரேஷ்சிவம் அவர்கள் குழுவினரின் திருமுறை இசையரங்கு செவிக்கும், சிந்தைக்கும் விருந்தாக அமைந்தது.

பிற்பகல் 4.00 மணியளவில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் நமது தவத்திரு குன்றக்குடி அடிகளார் மகளிர் கல்வியியல் கல்லூரி உயராய்வு மைய இயக்குநர் முனைவர் திரு.எஸ். மோகன் அவர்களுக்கு "கல்வியியல் மாமணி" என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டிச் சிறப்பித்தருளினார்கள்.

Koviloor Digital Library

பிள்ளையார்பட்டி, ஸ்ரீ நாராயண ஆசிரமம், அருள்திரு கோவிந்தானந்த சுவாமிகள் அவர்களும், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் திரு.எஸ்.சுப்பையா அவர்களும் பாராட்டுரை வழங்கினர். திரு.முன்னவர்.எஸ். மோகன் அவர்கள் ஏற்புரை வழங்கினார். திரு.முனைவர்.சொ.சேதுபதி அவர்கள் இணைப்புரை வழங்கினார்.

நன்றியுரைக்குப் பின் மங்கல வாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது.

இரவு 7.00 மணியளவில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவீற்றிருந்து நூற்றுக்கணக்கான அன்பர்களுக்கு அருளாசி வழங்கி, குருவருள் பிரசாதம் வழங்கி அருளினார்கள்.

---

குன்றக்குடி

## அருள்தரு அறுமுகச் செவ்வேள் பெருமான்

## கந்தர் சஷ்டி விழா

குன்றக்குடித் திருத்தலத்தில் கண்கண்ட தெய்வமாய் எழுந்தருளியிருக்கும் அருள்தரு அறுமுகச் செவ்வேள் பெருமானுக்கு திருவள்ளுவராண்டு 2048 (ஏவிளம்பி ஆண்டு) ஐப்பசித் திங்கள் 2-ஆம் நாள் (20.10.2017) வெள்ளிக்கிழமை முதல் ஐப்பசித் திங்கள் 9-ஆம் நாள் (26.10.2017) வியாழக்கிழமை வரை **கந்தர் சஷ்டி விழா** சிறப்பாக நடைபெற்றது. முதல் ஆறு நாட்களும் நூறாயிரம் போற்றி வழிபாடு - தமிழ் அருச்சனை மாலை நேரத்தில் நடைபெற்றது. ஆறாம் திருநாளன்று மாலை 4.00 மணியளவில் அறுமுகச் செவ்வேள் அம்மையிடம் சக்திவேல் வாங்குதலைத் தொடர்ந்து வெள்ளிரதத்தில் எழுந்தருளினார். உடன் பரிவார தெய்வங்கள் எழுந்தருளி திருவீதி உலா நடைபெற்றது. மாலை சூரனைத் **தடிதலும் ஆட்கொள்ளலும்** நிகழ்ந்தது. மறுநாள் மாலை 6.45 மணியளவில் திருநாள் மண்டபத்தில் **தெய்வயானை திருமணம்** நடைபெற்றது. தொடர்ந்து தங்க ரதத்தில் சுவாமி திருவீதி உலா நடைபெற்று சேர்க்கை சேர்ந்தவுடன் விழா இனிதே நிறைவுற்றது.

Koviloor Digital Library

## சிறப்பாசிரியருக்குக் கடிதம்....

தாங்கள் என் துணைவியார் தாயம்மாள் வழி அனுப்பியிருந்த “அன்பே வாழ்வு” எனும் நூல் கிடைத்தது. மிக அழகாக எழுதப்பட்டு உயர்ந்த தாள்களில் உயர்ந்த முறையில் அச்சிடப்பெற்றுள்ளது. ஆர். பாலகிருஷ்ணன் நல்லதோர் அணிந்துரையை வழங்கியுள்ளார். நூல் முழுவதையும் படித்துப் பார்ப்பேன். நூலை ஒருமுறை புரட்டிப் பார்த்தபோது 18ஆம் தலைப்பாக மதுவை ஒழிப்போம் எனும் தலைப்பைக் கண்ணுற்றேன். நீண்ட காலமாக அறஇலக்கியங்களையும் தமிழரால் பேசப்படும் அறக்கோட்பாடுகளையும் பற்றி ஆராய்ந்து வருகிறவன் எனும் முறையில் எனக்கு ஒரு பெரும் ஐயம். திருவள்ளுவர் காலம் தொடங்கி, நாம் எடுத்துரைத்து வரும் அறவுரைகள் ஏட்டளவிலேயே உள்ளன. இவை மக்களின் வாழ்க்கையோடு இரண்டறக் கலக்காதது ஏன்? இத்தகு ஒரு பண்பாட்டுக் கலப்பைக் கிறித்துவ மதம் தழுவி வளர்ந்த ஐரோப்பியர் பண்பாட்டில் இன்றும் நேர்முகமாக அனுபவிக்கலாம். அதுபோலவே லீ குவான் யூ உருவாக்கிய சிங்கப்பூரில் காணமுடியும். இவ்விரு பகுதிகளை விடப் பெரிய அளவில் தமிழரிடையே பேசப்பட்டும் நீரில் கலக்காத நெய்யாக நம் அறவுரைகள் மிதக்கின்றன. அதற்கு ஒரு வழி கண்டால் ஒழிய நம்முடைய முயற்சி பயனளிக்கப் போவதில்லை. என்னுடைய அற இலக்கியக் களஞ்சியம் எனும் 1000 பக்கங்கள் உடைய நூலைப் பார்த்திருப்பீர்கள். அது பெரும் ஏடாக மட்டும் கொண்டாடப்படுகிறது. நம் நரம்போடும் நாடியோடும் கலக்கவில்லையே, ஏன்? என்னை உறுத்திக் கொண்டிருக்கும் வினாவைத் தங்கள் முன் சமர்ப்பிக்கிறேன் அவ்வளவுதான்.

எந்தச் சமுதாயத்தை மக்கள் அரசு நடைமுறை சாத்தியம் ஆகியன ஒருங்கிணைந்து போகிறதோ அங்குதான் நேர்மை சாத்தியம் என்று தோன்றுகிறது. நம் நாட்டில் அத்தகு ஒருங்கிணைப்பும் நடைமுறையும் இல்லை.

– க.ப. அறவாணன், சென்னை

---



என்னைப் பொறுத்தமட்டில், ஒழுக்கத்துடன் நடந்தால், உண்மையை ஒளிக்காமல் எதையும் நேர்மையுடன் கடைபிடித்தால் அதற்கு தனி சக்தி உண்டு என்பதை நம்புகிறேன்.

– ஈ.வே.ரா. பெரியார்

Koviloor Digital Library

# சிந்தனை வட்டம்

## அடிகள் விருது வளர்க! வாழ்க!

ஆல மரத்தின் அருகே இறங்கும்
ஏல விழுதின் இருப்பைப் போல
சீலர் குன்றக் குடியடி கள்தம்
சால்பு மிகுந்த சீடர் இருவர்
நீல மேகர்! நிறைபுகழ் சான்ற
கோல பரம குருவாம் பெயரர்!
அடிகள் பெருமான் ஆன்ற பெயரில்
வடிவமைத் திட்ட வண்டமிழ் விருதை
பொன்னம் பலப்பெயர் அடிகள் அருள
இந்நிலம் பெற்றதே இரும்புகழ் இருவரால்!
அலுப்பிலா உழைப்பை அனுதினம் தந்த
அன்னார் இருவர் மடாலய விழுதினர்!
அடிகள் தம்மின் வலஇட மானவர்!
கொடியாய்ச் சுற்றிச் சுற்றிப் படர்ந்தே
தொண்டு புரிந்த தொய்விலாத் தன்மையைக்
கண்டே விருதைக் கனிவுடன் பெற்றனர்!
தொடங்கிய முதலாம் ஆண்டு விருது
அடங்காப் புகழுடன் வளர்க! வளர்கவே!

– தமிழாகரர். தெ.முருகசாமி, புதுச்சேரி

## விரைந்து வருவான்

நெறி கொண்டு வாழ்பவர்
நொடி தோறும் சாகின்ற
நிலை மாற்ற சீக்கிரமே
மலையாண்டி இங்கு வருவான்!
பாவங்கள் பல கோடி
செய்தவர்கள் மேலும் பாவம்
செய்தேதான் ஜெயிக்கும்நிலை
சீக்கிரமே மாற்ற வருவான்!
**பொன்னம்பலக் கவிராயர்**
புலம்பலில்லை; ஆதங்கம்!
பொய்ம்மைஅற்ற வாழ்வுதர
பூமிநாதன் மகன் விரைந்து வருவான்!!

– சித்தர்பீடம். சீத்தலைச்சாத்தன்

Koviloor Digital Library

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி
# பரிமள விலாஸ்
# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

**வாங்கி உபயோகியுங்கள்**

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**
அடிவாரம், பழநி - 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

Koviloor Digital Library



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)
குன்றக்குடி - 630 206
Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்
**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி, 2. அழகுக்கலை, 3.லெதர் & ரெக்ஸின் பொருட்கள் தயாரித்தல், 4. பற்றவைப்பு (ஆர்க் & கேஸ் வெல்டிங்), 5.செல்போன் பழுது நீக்குதல், 6. T.V, Radio- பழுது நீக்குதல், 7. எம்ப்ராய்டரி 8. பனை ஓலைப் பொருட்கள் தயாரித்தல், 9.வீட்டு வயரிங் வேலை செய்தல், 10. இரண்டு சக்கர வாகனம்பழுது நீக்குதல், 11. ஆபரண நகை தயாரித்தல், 12. திரை அச்சு வேலை, 13. சேலை டிசைனிங், 14. கைவினைப் பொருட்கள் தயாரித்தல், 15.பொம்மைகள் தயாரித்தல், 16. காகித உறை மற்றும் பைகள் தயாரித்தல், 17. வீட்டு உபயோகப்பொருட்கள் பழுது நீக்குதல், 18. உணவுப் பொருட்கள் தயாரித்தல், 19. பேப்ரிக் பெயிண்டிங், 20. சாக்பீஸ், மெழுகுவர்த்தி, பினாயில், சாம்பிராணி தயாரித்தல் 21. கயிறு திரித்தல், 22. GFRB பொருட்கள் தயாரிப்பு, 23. சேலை புதுப்பித்தல் சுருக்கம் நீக்குதல், 24. எலக்ட்ரானிக் சோக் தயாரித்தல், 25. கூடை முடைதல், 26.உல்லன் நிட்டிங் 27. நாப்கின் தயாரித்தல், 28. தையல் இயந்திரம் பழுது நீக்குதல், 29. போட்டோ லேமினேசன், 30. ஐஸ்கிரீம் தயாரித்தல் 31. காளான் வளர்ப்பு, மண்புழு உரம் தயாரித்தல்,

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

Koviloor Digital Library


# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின்அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | ½ பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

**சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :**

நிர்வாகி

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

சிவகங்கை மாவட்டம்

தொலைபேசி எண் : 04577 - 264227

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும் மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும் அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி


LIBRARY, KOVILOOR 45423

Koviloor Digital Library




8-9-2017, குன்றக்குடியில் நடந்த குருபூசை விழாவில்
முனைவர் திரு. எஸ். மோகன் அவர்களுக்கு“கல்வியியல் மாமணி” பட்டம் வழங்கிய நிகழ்வு.

Koviloor Digital Library

BOOK POST
Book pocket containing printed matter
MAKKAL CHINTHANAI-July-Nov' 2017
Price Rs. 8-00
Date of Publication 6-11-2017


# பாண்டியன் சரஸ்வதி யாதவ் பொறியியல் கல்லூரி



மதுரை - சிவகங்கை நெடுஞ்சாலை, அரசனூர்.
Cell : 98421 02628, 73730 02628
Counselling Code 5912
Email : info@psyec.edu.in
Web : www.psyec.edu.in




+2 / டிப்ளமோ முடித்த மாணவ, மாணவியர் கவனத்திற்கு பொறியியல் படிப்பிற்கான நேரடி சேர்க்கை நடைபெறுகிறது.

**BE** CIVIL MECH EEE ECE CSE

**ME** CSE • VLSI Design, Power Electronics & Drives, Communication Systems, Energy Engineering, Environmental Engineering

M.Tech IT

PSYEC MERIT SCHOLARSHIP*

| கல்வித்தகுதி | Cut off Marks / Percentage | கல்வி உதவித்தொகை |
|---|---|---|
| 12th Std | 170 மதிப்பெண் & அதற்குமேலும்<br>160 முதல் 169 மதிப்பெண் வரை | 100 % உதவித்தொகை (4 ஆண்டுகளுக்கும்)<br>50 % உதவித்தொகை (4 ஆண்டுகளுக்கும்) |
| Diploma | 85% அதற்குமேலும்<br>75% முதல் 84% வரை | 100 % உதவித்தொகை (3 ஆண்டுகளுக்கும்)<br>50 % உதவித்தொகை (3 ஆண்டுகளுக்கும்) |

## P.S.Y கல்வியியல் கல்லூரி (இருபாலர்)

- ★ மாணவ, மாணவியர்களுக்கு தனித்தனியே விடுதி வசதி உள்ளது.
- ★ கல்விக் கட்டணத்திற்கு வங்கிமூலம் கடன் வசதி
- ★ மதுரை (அனைத்து பகுதிகளிலிருந்து), அலங்காநல்லூர், திருமங்கல சிவகங்கை, திருப்பத்தூர், திருவாடனை, ஆர்.எஸ்.மங்களம், இளையான் கமுதி, பார்த்திபனூர் மற்றும் திருப்பாச்சேத்தியிலிருந்து கல்லூரி இயக்கப்படுகின்றன.

நேரடி சேர்க்கைக்கு
நிர்வாக அலுவலகம்: 241/1-B, புதுநத்தம் ரோடு, (இராமகிருஷ்ணா மடம் அருகில்), நாராய ... 014.
98423 02628





பெறுநர் :129 திரு.
திருவருள் திரு சுவாமிகள் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
ானகிரி அஞ்சல்
ாரைக்குடி வழி

திரு ______ அவர்கள்

அச்சிட்டோர் : சண்மு... அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166